# நவசக்தி

| வாரப்பதிப்புச் சந்தா விவரம் | | ரூ. அ. |
|---|---|---|
| வருட சந்தா | ... | 5 0 |
| ஆறுமாத சந்தா | ... | 3 0 |
| வெளி நாடு-வருட சந்தா | ... | 6 0 |

வாரப் பதிப்பு

வெள்ளிக்கிழமை தோறும் வெளிவருவது.

**விளம்பர விகிதம்.**
கலம் 1-க்கு வாரம் 1-க்கு ரூ. ... 7 0
சில்லறை விளம்பரம் 1 அங். ... 0 8
முன்பணமின்றி விளம்பரஞ் செய்யப்பட மாட்டாது.

"வீடு பெறநில்" "மாற்ருனுக் கிடங்கொடேல்" "ஏற்பதிகழ்ச்சி"

சிலம்பு ரு — குரோதனஹு புரட்டாசிமீ உசவ (9—10—25) — பரல் ருக


## சிலம்பொலி

### ஆண்மையும் அடிகளும்

ஆண்மை என்பது யாது? இது குறித்து விரித்துக் கூறவேண்டுவதில்லை, ஆண்மை அதனினும் நல்லாண்மை என்பது யாது என்று ஏற்றைக்குச் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் நந்தமிழ்நாட்டிற்ருேன்றிய ஆண்டகையார் ஒருவர் கூறிப்போந்தார். அவ்வாண்டகையார்,

"நல்லாண்மையென்பதுஒருவற்குத்தான்பிறந்த
இல்லாண்மைஆக்கிக்கொளல்"

என்று கூறிப்போந்தார். இத்திருக்குறள் குடிசெயல்வகை என்னும் அதிகாரத்தில் மிளிர்வதாயினும், அஃது இதுபோழ்து நாம் பிறந்த இல்லாகிய பாரத நாட்டின்மீது எமது கருத்தைச் செலுத்துகிறது. அக்கருத்துக்கொண்டே அத்திருக்குறளை நோக்குமாறு ஏனைய அன்பர்களையும் வேண்டுகிறோம்.

* * *

நல்லாண்மை என்பது எது? நேயர்களே! கூர்ந்து சிந்தியுங்கள். ஒருவன் தான் பிறந்த இல்லாண்மை ஆக்கிக்கொளல் என்று திருவள்ளுவனார் அறிவுறுத்துகிறார். தான் பிறந்த இல்லைப் பிறர் வயப்படுத்திக் காலங்கழிப்பது ஆண்மையாகுமோ? தனது இல்லைப் பிறர் வயப்படுத்தி வாளாகாலங் கழிப்போன் நாணுடையோன் ஆகான், ஆண்மைக்குறள் மிளிரும் அதிகாரம் 'நாணுடைமை'என்னும் அதிகாரத்தின் பின்னர் வைக்கப்பட்டதுங் கவனிக்கற்பாலது. நல்லாண்மைக்கு நாண் இயற்கையணி போன்றதன்றோ? நாணிழந்து உலகில் வாழ்தலினுஞ் சாதலே நன்று. நாணில்லார் உயிருடை மாந்தராவரோ?

"அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்
[கஃதின்றேல்
பிணியன்றோ பீடுநடை"

என்றும்,

"நாணால் உயிரைத்துறப்பர் உயிர்ப்பொருட்டால்
நாண் துறவார் நாணாள் பவர்"

என்றும்,

"நாணகத் தில்லார் இயக்கம் மரப்பாவை
நாணால் உயிர்மருட் டியற்று"

என்றும்,

நமது ஆண்டகையார் கூறியிருத்தல் காண்க.

* * *

நாம் பிறந்த பெரிய இல்லம் நமது நாடு. அப்பேரில்லம் நமது வழி இயங்கயில்லை எனில் நாம் பிறந்த சிறிய இல்லம் நம் வழி எவ்வாறியங்கும்? இல்லறமாகிய அகவின்பத்துக்கு ஊறு நிகழாதவாறு காக்கவேண்டுமானால் புறவின்ப மூட்டமுற்றுகிய நாடு நம்வழி யியங்கல்வேண்டும். உரிமையில்லா நாட்டில் வாழும் மக்கட்கின்பமில்லை என்று தெளிவாகக் கூறலாம். இன்பத்துக்குப் பிறப்பிடம் உரிமை என்பதை விளக்கவேண்டுவது அநாவசியம், "நாமார்க்குங் குடியல்லோம்" என்றருளிய அப்பர் சுவாமிகள், அதற்கு, அதேதிருப்பாட்டில் "எந்நாளும் இன்பமே துன்பமில்லை" என்று பொருள் விளக்கியிருத்தல் காண்க. அடிமை நீங்கிய உரிமையிலேலேயே இன்ப மணம் என்றுங் கமழுமென்க.

* * *

நமது நாட்டிலுள்ள இல்வாழ்க்கை செவ்வனே நடைபெறுவதில்லை, வறுமையாலும் பிணியாலும் பிணக்காலும் வேறு பலவற்றாலும் பீடிக்கப்பட்டு இல்வாழ்வு குலைந்து வருவதை நாமுங் கண்ணுறப் பார்த்துஞ் செவியுறக் கேட்டும் நாணமின்றி வாழ்ந்து வருகிறோம். வறுமை முதலிய குறைபாடுகள் உறுதற்குக் காரணமென்னை? போதிய பொருளின்மையே யாகும். "பொருளிலார்க் கிவ்வுலகமில்" என்று ஆண்மை யியல்புணர்ந்த நமது வள்ளுவனார் அறைதல் காண்க. "முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னால் முடியுமன்றே" என்றார் நமது மணிவாசகனாரும். இவ்வுலக வாழ்விற்குப் பொருள் இன்றியமையாதது. அப்பொருள் வளஞ் சுருங்கச்சுருங்க இன்ப நலனுஞ் சுருங்குதல் இயல்பே. பொருள் போக்கிற்குக் காரணம் நாம் பிறந்த இல்லம் நம் வழி இயங்காமையேயாகும். துணிக்கு மாத்திரம் நமது நாட்டுப்பொருள் அறுபது கோடி வெளிநாட்டுக்குப் போகிறதெனில் மற்றவற்றிற்கு எவ்வளவு பொருள் போகுமென்பதைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ? வீட்டுப்பொருள் பெரிதும் வெளி சென்றுகொண்டிருந்தால், வீட்டில் இன்பமேது? இன்பமில்லா வீட்டில் சண்டையுங் கூச்சலுங் குழப்பமும் நிகழ்தல் இயல்பு. நமது நாட்டின் நிலை இதுபோழ்து எவ்வாறிருக்கிறதென்பது வெள்ளிடைமலை.

* * *

நாம் பிறந்த இல்லமாகிய பாரதநாட்டின் வளங்குறைந்து வருதல் காணும் மைந்தர் பலர் அக்குறைபாட்டை நீக்க முயலாது குறைபாட்டிற்கே பெரிதும் முயன்றுவருதல் கண்கூடு. இவ்வாறு சொல்லுதல் நியாயமோ என்று சிலர் கருதலாம். அவ்வன்பர்கள் நம்மவர்கள் செயலைச் சிறிதுநேரம் உற்றுநோக்குவார்களாக. முதலாவது பள்ளியில் படிக்கும் மாணக்கர்களைக் கவனிக்கலாம். இவர்கள் எவ்வெண்ணத்தோடு பள்ளி நுழைகிறார்கள்? 'படித்து ஏதாயினும் உத்தியோகம் பெறலாம்' என்னும் எண்ணமன்றி வேறெவ்வெண்ணம் அவர்கள் உள்ளத்தில் குடிகொள்கிறது? இளமையிலேயே இவ்வெண்ணத்துக்கு எளியராகும் மாணக்கர்கள் பின்னை நாட்டின் நலங்கருதி உழைப்போராதலரிது. அவர்கள் பயிலுங் கல்வியோ அவர்கட்கு உரிமையுணர்வு ஊட்டுவதுமன்று. இப்பொழுது இத்தகை மாணக்கர்களாயிருப்பவர்களே பின்னைப் போலீஸ் அதிகாரிகளாகவும், மாஜிஸ்டிரேட்களாகவும், கலெக்டர்களாகவும் நிர்வாக அங்கத்தவர்களாகவும் வரப்போகிறார்கள். இவர்கள் வாயிலாகத் தேசசேவை எவ்வாறு எதிர் பார்க்கமுடியும்?

* * *

இப்பதவிபெறாத சிலர் வக்கீல்களாகிறார். அவர் கருத்து வழக்கின்மீதும் பொருளின்மீதும் படிகிறதல்லாமல், உரிமையின்மீது படிகிறதில்லை. இவ்வக்கீல் கூட்டத்தில் சில நன்மக்களிருக்கலாம். பொதுப்பட வக்கீல்கள் செய்யுங் கிளர்ச்சியின் அடிப்படையை ஆராய்ந்தால் அது தன்னலத்தில் முடிவது காணலாம். இவர்கள் செய்யுங் கிளர்ச்சி அதிகாரவர்க்க அமைப்புகளில் அங்கம்பெறல் முதலியவற்றைக் குறிக்கொண்டுநிற்பதாகும்.

* * *

வக்கீலாகாத மாணக்கர் சிலர் உற்ற வயதில் வாணிபஞ் செய்யப் புறப்படுகிறார். இவர் வாணிபம் மேல்நாட்டுப் பொருளை வாங்கி விற்றுச் சிறு ஊதியம் பெறுவதாகும். இஃதென்ன வாணிபம்? இதனால் நாட்டுக்கு நலன் உண்டா கேடு உண்டா என்று நாம் சொல்ல வேண்டுவதில்லை. இம்மக்கள் வாணிபம் நமது நாட்டுத் திருவை மேல்நாட்டுக்குத் துரத்துகிறதெனச் சுருங்கக் கூறலாம்.

* * *

[illegible]கள் தொழிற்சாலைகளிலும், அரசாங்க சாலைகளிலும் கணிதர்களாகிறார்கள். இவர்கள் இயந்திரங்கள் போல உழன்று உழன்று ஓய்வடைந்து விடுகிறார்கள். இவர்கள் உள்ளத்தில் உரிமைத் தெய்வம் எவ்வாறு கோயில் கொள்ளும்?

* * *

கற்றவர் நிலை இவ்வாறாக, கல்லார் நிலை குறித்து ஒன்றுங் கூறவேண்டுவதில்லை. அவருள் பலர் மேல்நாட்டு முதலாளிகள் தொழிற்சாலைகளில் தொழில் புரிபவர்களாய் விடுகிறார். மற்றவர் விவசாயம் முதலிய தொழில் புரிகிறார். மேல் நாட்டுப் பொருள் மலிவால் நாட்டுத் தொழிலாளர் பலர் நாட்டுத் தொழில் புரிய இடம்பெறாது கூலியாட்களாக வெளிநாடு செல்கிறார். பாரதநாடெனும் நமது வீட்டு மக்கள் இந்நிலையுற்றிருக்கிறார்கள். தாம் பிறந்த இல்லாண்மையாக்கிக் கொள்ளுந்திறன் நம்மவர்கள்பால் காணோம்; காணோம்.

* * *

தாதாபாய் திலகர் முதலிய ஒரு சிலர்க்கு உரிமை வேட்கை எழுந்தது. அவ்வெழுச்சிக்குத் துணைபுரிய நாடு சித்தமாகவில்லை. மேற்கூறியவாறு நாட்டிற் பிறந்த மக்களே நாட்டு நினைவிழந்து வாழ்வார்களாயின் ஒரு சிலர் முயற்சி என் செய்யும்? தலைவர்கள் உழைப்பும் காங்கரஸ் முயற்சியும் பயன்படாமை கண்ட ஒருவர் "எத்தனை நாள் நாம் பிறந்த வீட்டை நமக்குரிமையாக்காது கிடப்பது" என்றெண்ணி அறக்கிளர்ச்சி புரியத்தொடங்கினார். 'நமது வீட்டில் நமக்கு உரிமையில்லையா' என்ற நாணுடைமை அவர்க்கு ஆண்மை எழுப்பிற்று. அவருந் தாம் பயின்ற கல்விவழி நின்று பாரிஸ்டர் தொழில் செய்துகொண்டு மேல்நாட்டு நாகரிகத்தில் மூழ்கியிருப்பாரானால் அவ்வாண்மை எழுந்திராது. தம்மைப்பற்றிய அந்நாகரிகத் தீட்டுக்கு அவர் தென்னாப்பிரிக்காவில் கழுவாய் தேடிக்கொண்டமையால், அவர் தாம் பிறந்த நாடாம் வீட்டின்மீது அவரது கருத்துச்சென்றது. அதன் நிலையுணர்ந்துநாணுடையராய்"எனதுவீட்டை என தாக்கிக்கொள்ளாதவரை எனக்கு வீடென்ன வாசலென்ன" என்று எல்லாந் துறந்து நாட்டின்நிலை அறிவிக்கும் ஒரு கோலந் தாங்கி ஆண்மகனுயுழைத்து வருகிறார். திருவள்ளுவனார் கூறும் நாணுடைமைக்கும் நல்லாண்மைக்கும் இலக்கியம் அப்பெரியார். அவர் யாவர்?

* * *

காந்தியடிகள் முதல்முதல் மக்கள் ஆண்மை கெடுக்கும் மூல காரணங்கள் இன்ன இன்ன என்று கண்டார். கண்டு நல்லாண்மை கெடுக்கும் பள்ளிக் கூடத்தை — நீதிமன்றத்தை — சட்டசபையை—ஒழிக்குமாறு தம்முடன் பிறந்தாரை வேண்டிக்கொண்டார்; இழந்த ஆண்மை பெறத்தீண்டாமை விலக்குமாறும், ஹிந்து முஸ்லீம் ஒற்றுமை வளர்க்குமாறும், ராட்டினஞ் சுழற்றுமாறும் வேண்டினர். அவர் வேண்டுதல் நிறைவேறிய விடங்களில் தளர்ச்சி நீங்கி ஊக்க மெழுந்து, ஆண்மை யுறலாயிற்று. இளவரசர் வரவேற்பை விலக்கு மளவும் ஆண்மைத்திறன் எழுந்தது.

* * *

பின்னை அவ்வாண்மை கெடுக்கும் முயற்சி தலை காட்டிற்று, மீண்டும் நம்மவர்கள் ஆண்மை குலைக்கும் நெறி பற்றலாயினர். ஆண்மை மிகுந்த ஒருவர் என் செய்வார். அவரவர் சொல்வழி செல்வழி காங்கரஸை விடுத்தார். நல்லாண்மை வழங்க வந்த மருத்துவர் ஆண்மைக்குரிய ஒத்துழையாமையை ஒழிக்க ஒருப்பட்டாலும் அதன் உயிராக உள்ள ஒன்றை இன்னும்விட ஒருப்படவில்லை. அவ்வொன்று யாது? அதுதான் கைராட்டினம். அதன் வழித் தம்முடன் பிறந்தார்க்கு ஆண்மை எழுப்ப அவர் முயல்கிறார்.

* * *

காந்தியடிகள் எல்லாவற்றையும் விட்டுக் கொடுத்தார். ராட்டினத்தை இன்னும் விட்டுக்கொடுக்கவில்லை. ராட்டினத்தை என்றும் அடிகள் விட்டுக் கொடுக்கமாட்டார். ஒத்துழையாமை நாட்டில் - தூலத்தில் - ஒடுங்கினும், அது சூக்குமத்தில் ஒடுங்கவில்லை என்பதை ராட்டின இயக்கங் காட்டுகிறது. காந்தியடிகள் தாங்கியுள்ள கைராட்டினத்தில் பகிஷ்கார நிர்மாண முறைகளெல்லாம் அடங்கியிருக்கின்றன. பிரணவ மந்திரம் போன்றது கைராட்டினம். மந்திரங்கட்கெல்லாம் உயிர் பிரணவ மன்றோ? கைராட்டினமும் எல்லா முறைகட்குந் தாரகமென்பது கூர்ந்து சிந்திப்போர்க்குப் புலனாகும்.

* * *

முதல் முதல் கைராட்டின அழிவால் நமது நாட்டின் ஆண்மை குலைந்தது. கைராட்டின அழிவால் அறுபது கோடி ரூபா நமது வீட்டை விடுத்துச் செல்கிறது. இவ்வொன்றால் நாட்டுக்கு விளைந்த கேடே பெருங்கேடு. இதை உயிர்ப்பித்தால் எல்லாம் நலமுறும். ஒத்துழையாமை என்னும் ஆறு பல கிளைகளாகப் பிரிந்து நாட்டில் பாய்ந்துகொண்டிருந்தது. இப்பொழுது அக்கிளைகளெல்லாம் ஒன்றுபட்டுப் பேராறாக ஓடுகிறது. அப்பேராறே கைராட்டினம். கைராட்டினத்தில் கதர் என்னும் ஆக்கமும், பிற நாட்டுத்துணி விலக்கு எனும் அழிவும் அடங்கியிருத்தல் காண்க. கதர் குறிப்பு உரிமைக் குறிப்பாகும்.

* * *

இப்பொழுது நாட்டிலுள்ள கட்சித் திட்டங்களெல்லாம் ஆண்மை எழுப்பனவல்ல. அவை யாவும் அதிகாரவர்க்க அறைகளாகிய அமைப்புகளில் அடங்கி ஆண்மை கெடுப்பனவாகும். நல்லாண்மை இயல் காந்தியடிகள் காட்டும் கைராட்டினத்தில் இருக்கிறது. சட்டசபை நுழைவும் பிறவும் வீண் ஆரவாரமன்றி ஆண்மை யூட்டுவனவல்ல. [illegible] யாக்கிக் கொள்ளும் வழி காந்தி காட்டுகிறார். கண்ணுளோர் அவ்வழி நடப்பாராக.

# எதிரொலி

## I

### ஆத்மார்த்தம்

ஆத்மார்த்த மென்பது துறவற தருமத்தைச் சார்ந்ததென்று கூறுவதாயின் அப்படிப்பட்ட கொள்கைக்கு இஸ்லாத்தில் இடமில்லை. ஜட பதார்த்தங்களும் ஐம்புல ஆசைகளும் அறவே ஒழியவேண்டுமென்று இஸ்லாம் கூறவில்லை. யாம் ஏற்கனவே கூறியதேபோல் ஸ்தூலமும் ஸூக்ஷ்மமும் ஐக்கியப்பட்டால் மட்டுமே அந்த டைனமோவிலிருந்து ஆத்மார்த்தம் மின்சார தேஜோமயானந்தம் திகழ்ந்து நிற்கும். இஸ்லாத்தின் ஆத்மார்த்தமானது இந்த ஸ்தூல உடப்புடனே பிறந்து ஸ்தூலத்துடனே வளர்ந்து ஸ்தூலத்துடனே மரணபரியந்தம் விருத்தியாகின்றது.

## II

### அவதாரமும் தேவ அவதாரமும்

அவதாரம் என்பது ஆண்டவனோ அவனுடைய அம்சமோ இவ்வுலகில் பிறந்து வருவதைக் குறிக்கும். நாம் முன்னரே புனர் ஜனனத்தில் கூறியிருப்பதேபோல் மேலேயிருப்பது கீழே யிறங்குவது அறிவு நூன் முறைமைக்கு மாற்றமா யிருக்கிறது. அவதாரமென்பது மேலாயுள்ள ஆண்டவனைக் கீழாயுள்ள யோனிகளில் கொண்டுபோய்ச் சேர்க்கின்றது; இது மேன்மையான காரியமாகாது. இஸ்லாமானது ஆண்டவனை எங்கள் பால் இறக்குவதைக் காட்டினும் எங்களை அவன்பால் ஏற்றுகின்றது; அவன் எம்மிடம் இழிந்து வருவதில்லை; யாங்களே அவன்பால் ஏறிச்செல்கிறோம். ஆதலின் எண்ணில் பல யோனிகளுள்ளும் அக்கடவுளைக் கட்டுப்படுத்துவது முடியாது. இப்படிப்பட்ட கட்டுப்பாடு இயற்கைக்கும் மாற்றமாயிருக்கும். ஆதலின் மனிததெய்வத்தை (அவதாரத்தை) ஏற்றுக்கொள்வதைக் காட்டினும் தெய்விக மனிதனையே இஸ்லாமார்க்கம் ஏற்கின்றது.

"தாருல் இஸ்லாம்"

---

### நான்கு சகோதரர்கள்

ஒரு வீட்டுக்குள் அனேக சகோதரர்கள் இருப்பார்கள். அவர்களில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வேலையைச் செய்து வருவார்கள். ஒருவன் குடித்தன வேலையைப் பார்ப்பான். ஒருவன் வியாபாரம் செய்வான். ஒருவன் சும்மா வீட்டிலேயே உட்கார்ந்து கொண்டிருப்பான். மற்றும் ஒருவன் கச்சேரிமனிதனுயிருப்பான்.......கச்சேரி சகோதரன் வீட்டுத் திண்ணையில் பிரசங்கம் செய்துகொண்டிருக்கையில் 'சாகுபடி' சகோதரன் தண்டைக் கட்டிக்கொண்டு வெளியே செல்லவேண்டியதாயிருக்கும். நின்று பிரசங்கத்தைக் கேட்கும் சாவகாசம் கூட அவனுக்கு இருக்காது. நமதுநாட்டில் இப்பொழுது நான்கு கட்சிகள் இருக்கின்றன. ஜஸ்டிஸ் கட்சி, இது வீட்டில் உட்கார்ந்து உண்டு வரும் கட்சி. மிதவாத சுயேச்சைக்கட்சியார், இவர்கள் அரசாங்கத்தாருடன் வியாபார பேரம் செய்து வருகிறார்கள். இதுவரையில் இவர்களுக்கு வியாபாரத்தில் நஷ்டம் தான். இவர்கள் கடனுக்கு வியாபாரம் செய்து வருகிறார்கள். சுயராஜ்யகட்சியார், இவர்கள் 'கச்சேரி' மனிதர்கள். கடைசியாகத் தோன்றியிருப்பவர்கள் நூற்பவர் சங்கத்தார்கள். இவர்கள் தாம் குடித்தன சாப்பாட்டுக்கான தொழிலை ஏற்றுச் செய்பவர்கள்.

"ஸ்வராஜ்யா"

---

### இந்தியா சட்டசபையின் கோரிக்கை

இந்தியா சட்டசபையின் கோரிக்கை மிதவாதச் சங்கத்தின் கோரிக்கையேயாகும் என்பது வெள்ளிடைமலை. இத்தகைய முக்கியமான விஷயத்தில் சுயராஜ்யக் கட்சியினர் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் அபிப்பிராயத்தைக் கேட்டிருக்கவேண்டாமா? காங்கிரஸ் மகாசபையின் பிரதிநிதிகள் எனச்சொல்லிக்கொள்ளும் அவர்கள் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி ஒன்று இருக்கிறதென்பதையே மறந்து தாங்களே முடிவான அதிகாரிகள் என்று எண்ணி முடிவு செய்துவிட்டனர். சில்லாக்காரர் அல்லாத சுயராஜ்யக்கட்சியினருக்கே மேற்படி கோரிக்கை பிடிக்கவில்லை. காங்கிரஸ் மகாசபை இக்கோரிக்கையை நிராகரித்து விட்டால் சுயராஜ்யக் கட்சியினரின் நிலை என்னவாகும்? அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டுவதற்குச் சாவகாசம் நிரம்ப இருந்தது. ஆனால் பண்டித நேரு இதைப்பற்றி நினைக்கவேயில்லை. எந்தக் கமிட்டியின் பிரதிநிதி யென்று அவர் இந்தியா சட்டசபையில் சொல்லிக்கொள்கிறாரோ அக்கமிட்டி அங்கத்தினர்களை அவர் பொருட்படுத்துவதில்லை. "இவர்களுக்குச் சட்டசபை வேலையைப்பற்றி என்ன தெரியும்? அவர்களை நான் திரணமாக மதிக்கிறேன்" இதுதான் அவருடைய மனோபாவம். "நாங்கள் நிபுணர்கள்; எங்களுடைய வாக்கே முடிவானது." அது அவர் கொண்டாடும் உரிமை—"ஜன்மபூமி."

### ஐந்துலட்சம்

மிகச் சிறப்புற்ற திருத்தலமாக விளங்கும் ராமேசுவரம் தேவஸ்தானக் கமிட்டியார் அங்குள்ள உற்சவ முகூர்த்தத்திற்கு சுமார் ஐந்து லட்சம் ரூபா செலவில் ஒரு வயிர அங்கி செய்யத் தீர்மானித்திருக்கிறார்களென்ற செய்தி கிடைத்திருக்கிறது. உலகை ஆளுடை நாயகனுக்கு எத்தனை லட்சத்திற்கு ஆபரணங்கள் செய்யினும் செய்யலாம்! ஆனால் வயிரத்தில் ஐந்து லட்சம் ரூபா செலவிடுதல் அவசியமின்றென்றே கருத இடமிருக்கிறது. அந்நியநாட்டினர் பெருவாரியாகக் கொண்டுபோகிற பொருளுக்குக் காரணமான பொருள்களுள் வைரமும் ஒரு முக்கியமானதாகும். தவிர ராமேஸ்வரம் தேவஸ்தானத்தார் சுவாமியை வணங்கச் செல்பவருக்குப் பலவகையான வரிகளை விதித்திருக்கின்றனர். அங்கு தேங்காய் உடைப்பதற்கும் கற்பூரம் காட்டுவதற்கும் அர்ச்சனை செய்வதற்கும் பணங்கொடுத்து டிக்கெட் பெறவேண்டும். சுவாமியை எத்விதமாக வழிபடுவதானாலும் பணங்கொடுக்காமல் தீராது. இப்படியாக ஏழைகளிடம் சிறிது சிறிதாகச் சேர்க்க வழிபார்த்திருக்கிற கமிட்டியார் வைரத்தில் ஐந்து லட்சம் ரூபா செலவிடத் தீர்மானித்திருக்கின்றனர்! சுவாமியை அர்ச்சனை செய்து வணங்குதற்கு வைக்கப்பெற்றிருக்கிற வரிபோன்றவற்றையெடுத்துவிட முன் வந்திருப்பார்களானால் கமிட்டியார்க்கு மிகுந்த புகழும் புண்ணியமும் உண்டாகும். என்செய்வது? புண்ணியத்தைக் காட்டிலும் டம்பம் வலிபெற்று நிற்கிறது!

"குமரன்"

---

### மண்ணெண்ணெய்

பெரிய வீடுகளில் வாழும் பிரபுக்கள் மண்ணெண்ணெய் விளக்குகளின் தீமைகளை அவ்வளவாக அநுபவிக்கவில்லை. ஆனால் வறுமைமிகுந்த இந்நாட்டிலே சிறிய வீடுகளிலும் குடிசைகளிலும் வசிக்கும் மத்திய வகுப்பாரும் ஏழை ஜனங்களும் மண்ணெண்ணெய் விளக்கினால், அவர்கள் பெரும் பாலும் அறியாமலே—அநுபவித்து வரும் கேடுகள் அளவிறந்தன. வீடெல்லாம் புகைக்காடு. சுவாசிப்பதெல்லாம் மண்ணெண்ணெய் விளக்கின புகை. நகரங்களில் மட்டு மல்ல, நாட்டுப் புறங்களிலும் சிறிய வீடுகளில் வசிக்கும் ஜனங்களில் பெரும் பாலார் இந்த மண்ணெண்ணெய் விளக்குகளை உபயோகிப்பதால், அவர்கள் அவற்றின் விஷப்புகையையே சுவாசிக்கிறார்கள். பெட்ரும் என்ற படுக்கையறை விளக்குகளையும், மற்ற விளக்குகளையும், வைத்துக் கொண்டு சிறிய அறைகளிலும் வீடுகளிலும் படுத்து நித்திரை செய்வோர் இரவெல்லாம் மண்ணெண்ணெய் விளக்கின் புகையைச் சுவாசித்து, மூக்கெல்லாம் கருப்பாய், காலையில் மூக்கைச்சிந்தும் பொழுதும் காறி உமிழும் பொழுதும் சளியுடன் புகை வெளிவருவதைக் காண்பது சாதாரண சம்பவமாயிருக்கிறது! நகரங்கள் என்ற நரகங்களில், காற்றில்லாத கூற்றுவன் வீடுகளில் இரவெல்லாம் மண்ணெண்ணெய் விளக்கின் விஷப்புகையைச் சுவாசித்து வாழும் புருஷர்களும், பெண்களும் குழந்தைகளும் அடிக்கடி சுகக்கேடடைவது அதிசயமா?...மண்ணெண்ணெய் விளக்கேற்றி வைத்துவிட்டு ஒரு சிறிய அறையில் படுத்து தூங்கிய புதிய தம்பதிகள் அதன் விஷப்புகையை சுவாசித்து மறுநாள் காலையில் எழுந்திராமல் எமலோகஞ் சென்ற கதைகளும் உண்டு.

இந்த ஏழைநாட்டில் மண்ணெண்ணெய் விளக்கினால் செலவு குறைவு என்று சிலர் கூறலாம். உண்மையிலே செலவு குறைவாயிருந்தாலும் குணம் பெரிதா, பணம்பெரிதா? விளக்கெண்ணெய் விளக்குகள் லாபமும் நன்மையும் அளிக்கின்றன. மண்ணெண்ணெய் விளக்கு நஷ்டமும் தீமையும் விளைக்கின்றன. கால் ரூபாய்க்கோ, ஒரு ரூபாய்க்கோ பத்து ரூபாய்க்கோ ஓர் அழகான பித்தளை விளக்கு வெண்கல விளக்கு வாங்கினால், அது நூறு வருஷம், உங்கள் பேரன் பூட்டன் காலம்வரை மட்டுமல்ல, ஆயிரம் வருஷம் பூமி உள்ள வரை இருக்கக் கூடும். மண்ணெண்ணெய் விளக்கு தகர விளக்கு கெட்டுப்போனால் குப்பையில் போடவேண்டும். பத்து ரூபாய் கொடுத்து வாங்கும் ஜெர்மன் விளக்காயிருந்தாலும், அது கெட்டுப்போனால், தெருவில் எறியவேண்டியதுதான். இனி சிம்னி-, ஆறு மாதத்திற்கு ஒரு சிம்னி யென்று வைத்துக்கொண்டாலும் உங்கள் ஆயுள் காலத்தில், வாங்கும் சிம்னிகளைக் கணக்கிட்டுப் பாருங்கள். இனி அதன் புகையோ உங்கள் ஆயுள் வாழவேண்டிய உங்கள் அருமைக் குழந்தைகளின் ஆயுளைக் குறைத்து வருகின்றது!

"கிராம வாழ்க்கை."

# முறையீடு

### ஆந்திர - ராமாயணகானப் பிரபந்தம்

#### தெலுங்கு பாஷாபிமானிகளுக்கு ஒரு விஞ்ஞாபனம்

மேற்கூறிய கிரந்தமானது திருநெல்வேலி ஜில்லாவைச் சேர்ந்த யுவராஜபுரம் என்ற இளவரச நேந்தலில் தோன்றிய சீதா ராமகவி என்பவரால் செய்யப்பட்ட ஓர் அரிய நூல். இதில் பொதுவாய் அங்கீகரிக்கப்பெற்ற 6 காண்டங்களும் பல்வேறு ராகங்களில் இசைக்கப்பட்டிருக்கின்றன. இக்கவி வாதூல கோத்திரத்தைச் சேர்ந்த ஆலகுண்டள வமிசத்திற் பிறந்து சுமார் 100 வருடங்களுக்குமுன் ஜீவித்திருந்தார். இக்கீர்த்தனைகள் பனைவோலைப் பிரதியில் இருக்கின்றன. அவைகளை அச்சிடவேண்டிய கடினமான வேலையை கவியின் பிரபௌத்திரராகிய தூத்துக்குடி வக்கீல் குமாஸ்தா ஸ்ரீமான் வெம்பகோட்டை கிருஷ்ணய்யர் ஏற்றுக்கொண்டிருக்கிறார். தற்காலம் அவைகளைத் தமிழ் எழுத்தில் பிரசுரிக்க வேண்டுமென்பது மேற்படியாரின் அபிப்பிராயம். தமிழ்ப் பிரதி சரியானபடி விற்பனையாகும் விஷயத்தில் தெலுங்கு எழுத்தில் அச்சிடுவதாக அபிப்பிராயம். ஆந்திர மகாஜனங்கள் அனைவரும்-அதிலும்தக்ஷிண ஆந்திரர்கள் முக்கியமாயும் இவர்களைத் தவிர ஆந்திர பாஷாபிமானிகளாகிய எல்லோரும் இந்த விஷயத்திற்குப் போதுமான பொருளுதவி செய்யுமாறு வேண்டப் படுகிறார்கள் 6 காண்டங்களையும் தமிழில் அச்சிட்டுப் பிரசுரம் செய்வதற்கு ரூபா 400 செலவாகுமென்று உத்தேசம். எல்லாப் பணங்களையும் தூத்துக்குடி வக்கீல் குமாஸ்தா ஸ்ரீமான் வி. எஸ். கிருஷ்ணய்யருக்கு அனுப்ப வேண்டியது. அனுப்பப்பட்ட தொகைகளை மேற்படியார் பெற்றுக்கொண்டதும் உடனுக்குடனே தகுந்த ரசீதுகொடுப்பர்.

ஆர். பி. சுப்பிரமணிய்யர் மானேஜர், மெடுரா கம்பெனி தூத்துக்குடி, பாஸ்கர என். நாராயணய்யர், பி. ஏ. பி. எல். வக்கீல் தூத்துக்குடி, எம். நாராயணஸோமயாஜியார் பி. ஏ. பி.எல் வக்கீல் தூத்துக்குடி, ஆர். நரசிம்மய்யர், எம். ஏ. பி. எல். வக்கீல் தூத்துக்குடி, பி. எஸ். கிருஷ்ணய்யர், பி. ஏ. பி. எல். வக்கீல் தூத்துக்குடி, ஜி. எஸ். வெங்கட்டராமய்யர் பி. ஏ. பி. எல். ஹைகோர்ட்டு வக்கீல் தூத்துக்குடி.

---

### "தமிழும் தமிழ்மக்களும்"

நந் தமிழ் நாட்டிற்குப் 'பெண் கல்வி' போதிய அளவு இல்லாதது ஒரு பெரிய குறையே யாகும். கற்றறிந்த பெரியோர்களும் இன்னும் மற்றுமுள்ளோரும் பெண்கள் கற்றலின் அவசியத்தைப் பற்றி அடிக்கடி பிரசங்கங்களினாலும், பத்திரிகைகள் வாயிலாகவும் வற்புறுத்திய தன் பயனாகத்தான் தற்பொழுது சிறிது சிறிதாக இவ்விஷயம் வேரூன்றி வருகிறதென்றாலும் அவர்கள் கற்கப்புகும் கல்வியானது ஒரு சிறிதும் தமிழ் நாட்டிற்குப் பயன் படாதது மிகவும் விசன சமாசாரமானது; தற்பொழுது கற்கும் பெண்கள் ஒரு சிறுபான்மையோர் தான்: அதிலும் இந்தியக் கிறிஸ்தவர்களின்தொகைதான் அதிகம். எனவே இந்துப் பெண்களின் தொகை மிகச்சிறிதுதான். இவர்கள் கற்கும் கல்வியோ எல்லாம் ஆங்கிலம். நடையுடை பேச்சு எல்லாம் ஆங்கில முழக்கந் தான் புருஷர்கள் ஆங்கிலம்கற்றுப்பேசுவதைக் காட்டிலும் பெண்கள் கற்றுப் பேசுவது மிகத் திறமையாகத்தானிருக்கிறது. ஆனால் நம் தாய்ப்பாஷையின் கதியென்ன? அதை மறக்கவும் ஆரம்பித்து விட்டார்கள். 'மாதா வயிறெரிய மகேஸ்வர பூஜை' செய்வதுபோல் இவர்கள் தாய் பாஷையை மறந்துவிட்டு ஆங்கிலம் கற்பது மிகவும் அழகுதான்! நாம் பிறந்ததும் தமிழ்நாட்டில்; வளர்ந்ததும் தமிழ் நாட்டில். நமக்கு குழந்தை பருவத்தில் மழலைச் சொல் மழப்ப ஆரம்பித்ததும் தமிழ் பாஷையில்; நமக்கு அன்னை தந்தையர் ஊட்டின பாஷையும் தமிழ்; நமது வீட்டுப் பாஷையும் தமிழ். இப்பாஷையையே நாம் மறப்பது கூடவே கூடாது.

இக்காலத்திலும் நம் பாஷையை நன்றாய் விருத்தி செய்து அதிலே கண்ணும் கருத்துமாக சிற்சில பெண்மணிகள் இருக்கிறார்கள் என்றால் நாம் அவர்களைப்பற்றித் தெரிந்து சொல்லுதல் அவசியமன்றோ? அச்சிறுபான்மையோரில், ஸ்ரீலஸ்ரீ சுவாமி வேதாசலத்தின் மகளிராகிய ஸ்ரீமதி. திரு. நாகை நீலாம்பிகை அம்மாள் என்பார். இச்சகோதரி 'தனித் தமிழ்க் கட்டுரைகள்' என மகுடமிட்டு ஒரு சிறிய புத்தகம் வெளியிட்டிருக்கிறார். அம்மகளிரின் தாய்ப் பாஷையின் ஆற்றல் அதில் செவ்வனே விளங்குகிறது. சுவாமி வேதாசலத்தின் தமிழ் அறிவை அறிந்தோர் அவரது மகளிரும் அம்மாதிரி தமிழ் பாஷாபிமானம் கொண்டதில் மிகக்களிப்படைவர். அவரது பூரணஞானமும், நம் சகோதரிகளுக்கு வரும்படியாகவும் தற்காலம் கல்விகற்கும் பெண்மணிகளும் அதேபோல் தமிழை வளர்த்தலில் ஆற்றல் உண்டாகும்படிக்கும் இன்னும் தமிழ் பாஷையில் இதேபோல் பெண்மணிகளால் ஏராளமான புத்தகங்கள் ஏற்பட்டு தமிழ் அன்னை நம் நாட்டில் ஆண்டவமாட அருள் புரியுமாறு எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திப்போம். கே. ஆர். சர்மா.

---

### காந்தியடிகள் வாழ்க்கை நெறி

'நவசக்தி' பத்திராதிபர் அவர்களுக்கு, அன்பார்ந்த ஐய,

"நவசக்தி" சென்ற இதழில் சிலம்பொலியிலும், தலையங்கத்திலும் காந்தி இலட்சியங்களைத் தாங்கள் வற்புறுத்தி யிருப்பது கண்டு மகிழ்ச்சி யடைந்தேன். ஆனால் "நவசக்தி" நேயர்களில் பலர் இதுபற்றி ஆச்சரியமடைந்திருக்கலாம். ஒத்துழையாமையும், பகிஷ்காரங்களும் கனவென மறைந்துபோன இக்காலத்தில் திரும்பத் திரும்ப அவற்றைப்பற்றி எழுதுவதில் யாது பயன்? ஒத்துழையாமையின் தந்தையான காந்தியடிகளே அதைக் கைவிட்ட பின்னர் மற்றவர்கள் இன்னும் அவ்வியக்கத்தைக் கடைப் பிடிப்பது வீணன்றோ? நமது அருந்தலைவர் மகாத்மா காந்தி தமது பகிஷ்காரக் கோட்டை முழுவதையும் சுயராஜ்யக் கட்சினருக்கு ஒப்படைத்து விட்டார். நாம் இன்னும் அக்கோட்டையைக் காவல் புரிந்துகொண்டிருப்பது எற்றுக்கு? என்று இவ்வாறு ஒரு சிலர் கேட்கிறார்கள்.

ஆனால் காந்தியடிகளின் வாழ்க்கைத் தத்துவத்தையும், கொள்கைகளையும் இச்சமயத்தில் தான் அதிகம் வற்புறுத்த வேண்டுமென்று எனக்குத் தோன்றுகிறது. மகாத்மா காந்தி சுயராஜ்யக் கட்சியினருடன் சண்டை போட மறுக்கிறார் என்ற காரணத்தினாலேயே அவர் தமது வாழ்க்கை நெறியையே கைவிட்டதாக எண்ணுதல் மடமையாகும். அவர் இன்னமும் ஒப்புயர்வற்ற ஒத்துழையாதாராகவே விளங்குகிறார்; எப்போதும் விளங்கிவருவார். மூவகையன்றி ஐவகைப் பகிஷ்காரங்களையும் ஆதாரமாகக் கொண்ட வாழ்க்கை நெறியினின்றும் அவர் அணுவளவும் வழுவினவரல்லர். சுயராஜ்யக் கட்சிக்கு அவர் ஒவ்வொருபடியிலும் விட்டுக்கொடுத்து வருவது உண்மையே. இதனால் என்ன? தமது வாழ்க்கையில் ஒத்துழையா நெறியிலிருந்து தவறிவிட்டாரா? தமது உயர்ந்தஅடக்கத்தினாலும், சத்தியாக்கிரகநெறியினாலும் சுயராஜ்யக் கட்சியினரையும் கூடியவரை தமது வழிக்குக் கொண்டுவருவதே அவருடைய நோக்கம். இக்கருத்தை இவ்வாரம் வெளியான 'எங் இந்தியா'வில் வெளியிட்டிருக்கிறார். எப்படியாயினும் அவருடைய வாழ்க்கைதான் நமக்குக் குறி. அவர் காட்டும் நெறியினால் தான் இப்பாரதநாடு - ஏன்? இப்பூவுலகமே - விடுதலை பெறும் என்பது நமது திடநம்பிக்கை. ஆகவே அவர் தம் வாழ்க்கைத் தத்துவங்களைப் பரப்பிவருவது நமது கடமை.

ஆனால் கேட்போர் யார்? என்ற வினா எழலாம். இதைப்பற்றி நமக்குக் கவலையில்லை. புதிய கொள்கைகளுக்கும் முறைகளுக்கும் ஆரம்பத்தில் ஆதரவுகுறைவாகவே யிருக்கும். ஏசுநாதர் உயிர்வாழ்ந்தபோது அவருடைய உபதேசங்களைஎத்தனைபேர் ஏற்றுக்கொண்டனர்? இப்போதோ கிறிஸ்தவமதம் உலகமெங்கும் பரவியிருக்கிறது.

கண்ணபிரான் விசுவரூபங் கொண்டபோது துரியோதனன் அவரை இந்திரஜாலக்காரன் என்று சொல்லவில்லையா?

கலிலியோ என்பவன் உலகம் உருண்டை வடிவானதென்றும், சூரியன் ககனத்தில் தினந்தோறும் பிரயாணஞ் செய்வதில்லையென்றும், இருந்த இடத்தில் நிலையாக நிற்கும் சூரியனைப் பூமியே சுற்றி வருகிறதென்றும் முதன் முதலில் சாதித்தபோது அவனை ஒருவரும் நம்பினாரில்லை. இது பைபிளில் கண்ட சில சித்தாந்தங்களுக்கு விரோதமாயிருந்தபடியால் கிறிஸ்தவ மதகுருவான போப் அவனை அழைத்துச் சொல்லொணாச் சித்திரவதைகளுக் காளாக்கினர். துன்பம் சகிக்கமாட்டாமல் அவன் தன் புதிய கொள்கைகளைப் பகிரங்கமாகக் கைவிடுவதாகச் சொன்னான். போப் அக்கிராசனத்தில் நடந்த பெரிய சபையில் கைதியின் கூண்டிலிருந்து, தன்னுடைய கொள்கைகளெல்லாம் தவறானவை யென்று சொல்லி மன்னிப்புக் கேட்டுக்கொண்டான். ஆனால் கூண்டிலிருந்து கீழே இறங்கியவுடன் தன் நண்பனிடம் இரகசியமாய் "ஆனாலும் பூமி தானே சுற்றிக்கொண்டிருக்கிறது!" என்று சொன்னானாம்.

தற்போது பூமி நிலையாக இருக்கிறதென்றும் சூரியன்தான் பூமியைச் சுற்றி வருகிறதென்றும் யாரேனும் சொன்னால் பைத்தியக்காரன் என்று நகைப்பார்கள்.

காந்தியடிகளின் கொள்கைகளை உலகம் ஒருங்கே ஒப்புக்கொள்ளும் காலம் ஒரு சமயம் வரும். அக்காலத்தைப் பொறுமையுடன் எதிர்பார்த்துத் தொண்டு ஆற்றிக்கொண் டிருப்பது உண்மை யடியார்களின் கடன்.

சந்திரசேகரன்

# விஷமந்திரம்

## ஒரு சிறு கதை

### 'அகஸ்தியர்' எழுதுவது

...பக்திமான்" என்றால் எங்கள் ஊர் போஸ்டுமாஸ்டருக்கே தகும். பாகவதபுராணமே அவருடைய வேதம்; கண்ணனே அவருடைய தெய்வம். அவருடைய வீட்டுக்கூடத்தில் அழகியதொரு சிறு மண்டபம் கட்டி அதில் கண்ணபிரான் படத்தை ஸ்தாபித்திருந்தார். தினந்தோறும் மாலையானதும் அவரும் மனைவி படங்களை மலர்மாலைகளால் அலங்கரித்துத் திருவிளக்கேற்றி வைப்பார். போஸ்டுமாஸ்டர் தம்புராவில் சுருதி கூட்டிக்கொண்டு ராமஜபம் செய்வார். சனிக்கிழமை ஏகாதசி தினங்களில் பஜனை நடைபெறும். சுண்டல், வடை, பாயசம்—குழந்தைகளுக்குக் கொண்டாட்டம்!

நாராயண ஐயருக்குச் சொந்தத்தில் குழந்தைகள் இல்லை. ஆனால் ஊரிலுள்ள குழந்தைகள் எல்லாம் அவருடையது தான். இத்தனைக்கும் உபாத்தியாயர்! "ஸார்" என்றால் பிள்ளைகளெல்லாம் உயிரை விடுவார்கள். பயத்தினாலன்று, பிரியத்தினால். அவருடைய மாணாக்கர்களுக்கு, இராமயணம், மகாபாரதம், பாகவதம் இவற்றிலுள்ள கதைகள் ஒன்று விடாமற்றெரியும். தாயுமானவர் பாடலில் மூன்று பாடல் நெட்டுருவாய் ஒப்பிக்கும் மாணாக்கனுக்கு ஒருசேர் கற்கண்டு வாங்கித்தருவதாகச்சொல்வார். ஒருவரும் ஒப்புவியாவிட்டால் கற்கண்டை எல்லோருக்கும் பங்கிட்டுக்கொடுத்து விடுவார்!

மார்கழிமாதம் வரப்போகிறதென்று நாராயணையர் மனைவி புரட்டாசி மாதத்திலிருந்தே சாமான்கள் சேகரித்து வைப்பாள். அம்மாதத்தில் தினந்தோறும் வைகறையில் குழந்தைகள் பஜனைசெய்துகொண்டு ஊர்வலம் வருவார்கள். ஊர்வலம் போஸ்டு மாஸ்டர் வீட்டில் வந்து முடியும். பின்னர் பொங்கல், புளியோதரை, சர்க்கரைப்பொங்கல் வகையராக்கள். குழந்தைகள் உண்டு ஆனந்திப்பதைக்கண்டு கணவனும் மனைவியும் களிபேருவகை எய்துவார்கள்.

நான் அவருடைய பழைய மாணாக்கனதலால் அவரைப்பற்றி மிகைபடப் புகழ்ந்து கூறுகிறேன் என்று நீங்கள் சொல்லலாம். எங்கள் ஊருக்குச் சுற்றுப்புறம் ஐந்தாறுமைல் தூரத்திற் சென்று யாரை வேண்டுமானாலும் கேட்டுப்பாருங்கள். ஒரு முகமாய் என்னை ஆதரித்துச் சாட்சி உரைப்பார்கள். அப்பக்கத்தில் அவருக்கு அத்தனை செல்வாக்கு, மரியாதை.

அவருடைய செல்வாக்குக்குக் காரணம் செல்வமன்று. அவருக்குப் பொருட்செல்வம் அவ்வளவு இல்லை. ஏன்? கொஞ்சமும் இல்லையென்றே சொல்லலாம். மற்று, அவருடைய தூய ஒழுக்கமும், தெய்வபக்தியுமே முக்கிய காரணங்களாம். இத்துடன் அவருக்கு விஷகடிமந்திரத்தில் விசேஷத்தேர்ச்சியுண்டு. அவரிடம் ஜனங்கள் விசுவாசம் கொண்டிருப்பதற்கு இதுவும் ஒரு காரணமாகும். பகலிலும், இரவிலும், எந்த நிமிஷத்திலும் 'பாம்புகடி' என்று வந்தால் அவர் சிறிதும் தயங்குவதில்லை. தலைவலியையும், மலை ஜுரத்தையும் பொருட்படுத்தாமல் அவர் உடனே தலைமுழுகி ஈரத்துணியுடன் மந்திரம் செய்யத் தொடங்குவார். மூர்ச்சையாகி வந்தவர்கள் விஷம் இறங்கப் பெற்றுத் தெளிவடைந்து 'தபால் ஐயரை' வாழ்த்திக்கொண்டு செல்வார்கள். ஆனால் ஐயரோ இரண்டு மூன்று தினங்கள் பொறுக்கமுடியாத தலையிடி உபத்திரவத்தினால் வருந்திக்கொண்டிருப்பார்.

நாராயணய்யருக்குக் காந்தியடிகளிடம் பக்தி அதிகம் உண்டு. அவர் தேசபக்தருங்கூட. வங்காளப் பிரிவினைக்காலத்திலிருந்து சுதேசி விரதம் அநுஷ்டித்து வருபவர். ஆனால் மகாத்மாவின் திட்டங்களுள் 'தீண்டாமை விலக்கு' மட்டும் அவருக்கு விலக்கு. நானோ 'வைதிக' ஒத்துழையாதான். தீண்டாமை அனுசரிக்கிறவர்கள் அனைவரும் 'அவைதிகர்கள்' என்னும் அபிப்பிராயம் கொண்டவன். ஆகவே அடியேனுக்கும், போஸ்டுமாஸ்டருக்கும் இதுசம்பந்தமாய் நடந்த விவாதங்களுக்கு எல்லையில்லை. அவற்றை இங்கு எழுதுவதானால் கந்தபுராணமாக—முருகனடியார் மன்னிக்க— விரிந்துவிடும். அவருடைய வாதம் ஒன்றைமட்டும் இங்குக் குறிப்பிடுகிறேன். அவருடைய அம்புறாத்தூணியில் எல்லா பாணங்களும் விட்டான பிறகு கடைசியாக அவர் பிரயோகிக்கும் பாணம் இதுவே.

"எல்லாம்சரி, நான் உனக்குப் பிரத்யட்சமாகக் காட்டுகிறேன். கொடிய விஷசர்ப்பம் தீண்டியவன் ஒருவன் இங்குவரட்டும். மூன்றாவது மூர்ச்சை போட்டவனாகவே இருக்கட்டும். இதோ மந்திரம் செய்து விஷம் இறங்கச் செய்கிறேன்பார்! நீயே பல முறை இந்த மந்திர சக்தியைப்பார்த்திருக்கிறாய். ஆனால் ஸ்நானம் செய்தபின்னர் ஒருபறையனுடைய காற்றுமட்டும் என் பேரில் பட்டுவிட்டும், அப்போது மந்திரம் பலிப்பதில்லையே! விஷம் இறங்குவதில்லையே! இதற்கென்ன சொல்கிறாய்?"

அவருடைய இந்தப் பாசுபதாஸ்திரத்தை வெல்வதற்குத் தகுந்த அஸ்திரம் என்னிடம் வேறு இல்லை. ஆகவே எங்களுடைய வாதங்களை எவரேனும் கேட்டுக்கொண்டிருந்தால், அவர் பக்கமே முடிவாகத் தீர்ப்புச் சொல்லி விடுவது வழக்கமாயிருந்தது.

## II

தபால் ஆபீஸ் சோதனைக்கு இன்ஸ்பெக்டர் வந்திருக்கிறார் என்று ஒரு நாள் கேள்விப்பட்டேன். சற்று நேரம் வம்பு வளர்த்துவிட்டு வரலாமென்று சென்றேன். தபால் இன்ஸ்பெக்டர் பெத்த பெருமாள்பிள்ளை சரசமாகப் பேசும் சுபாவமுடையவர். சிடுமூஞ்சித்தனம் அவரிடம் இல்லை. போதாதற்குக் கதர்த் துணியாலான உட்சட்டை அணிந்துகொண்டிருப்பதையுங்கண்டேன். உடனே அவரிடம் காதல்கொண்டு விட்டேன். "இவர் ஒரு நான் கோ ஆபரேடர்" என்று போஸ்மாஸ்டர் என்னை அறிமுகப்படுத்தி வைத்தார். பொது அரசாங்கக் காரியாலயங்களில் உத்தியோகஸ்தர்கள் நடந்துகொள்ளும் பான்மையைப்பற்றி எப்படியோ பேச்சு வந்தது. "நமது அடிமைவாழ்க்கையின் பயன் என்றே சொல்லவேண்டும். முப்பது ரூபா சம்பளம்பெறும் ஒரு குமாஸ்தா தம்மிடம் யாரேனும் ஒரு சிறு காரியத்திற்காக வந்துவிட்டால் என்ன பாடு படுத்துகிறான்? எத்துணை கர்வம்? இந்தத் தமிழ்நாட்டிலே எந்தத் தபாலாபீஸுக்காவது, ரயில்வே ஸ்டேஷனுக்காவது போய் அங்குள்ள சிப்பந்திகளிடம் ஒரு சமாசாரம் தெரிந்துகொண்டு வந்துவிடுங்கள் பார்க்கலாம். ஒரு நிமிஷத்தில் போ, வா என்று நூறு முறை கூறிச் 'சள்' என்று விழுகிறான். தாங்கள் பொதுஜன ஊழியர்கள், பொது ஜனங்களின் பணத்திலிருந்து மாதச் சம்பளம் பெறுகிறவர்கள் என்பதைக் கனவிலும் நினைப்பதில்லை. மனிதருக்கு மனிதர் காட்டவேண்டிய மரியாதையும் கிடையாது. மறந்தும் இவர்களிடமிருந்து ஓர் இன்சொல் வாராது. மற்றவர் நம்மிடம் சிறு உதவி நாடி வந்தால் அதை ஒரு பாக்கியமாகக் கருதும் சுபாவம் நம்மவரிடம் எப்போது ஏற்படுமோ தெரியவில்லை" என்று இவ்வாறு சீர்திருத்தக் காரனுடன் உற்சாகத்துடன் சரமாரியாய்ப் பொழிந்தேன்.

"நீங்கள் சொல்வதில் பெரிதும் உண்மையிருக்கிறது. ஆனால் அவர்கள் இவ்வாறு நடந்துகொள்வதற்கு மற்றொரு காரணமும் உண்டு. அவர்கள் சிடுமூஞ்சிகளாவதற்கு வேலை மிகுதியே பெரும்பாலும் காரணம். இவ்வளவு வேலைத் தொந்திரவிலும் இனிய சுபாவமுடையவர் சிலர் இருக்கவே செய்கின்றனர்" என்றார் இன்ஸ்பெக்டர்.

"சந்தேக மில்லாமல்! இவ்வாறு பொது விதிக்கு விலக்காயுள்ளவர்களில் நமது போஸ்டு மாஸ்டரும் ஒருவர்!"

"இன்னும் எத்தனையோ தீமைகள் இந்நாட்டில் இருக்கின்றன. எல்லாவற்றிற்கும் பரிகாரம் சுயராஜ்யந்தான்" என்றார் போஸ்டு மாஸ்டர் இடையிற் புகுந்து.

சுயராஜ்யம், மகாத்மா காந்தி, ஒத்துழையாத் திட்டம்—என்று இவ்வாறு பேச்சு வளர்ந்து கொண்டேபோய் கடைசியில் தீண்டாமையில் வந்து நின்றது.

"தீண்டாமைச்சாபம் தொலையாத வரையில் இந்நாட்டிற்கு விடுதலைகிடையாது" என்று ஒரேயடியாகக் கூறினேன்.

"அப்போது நமது வேத சாஸ்திரங்கள் மந்திரங்கள் எல்லாவற்றையும் ஆற்றில் கட்டி விடவேண்டியதுதான். அத்தகைய விடுதலை எனக்கு வேண்டாம்" என்றார் நாராயணய்யர்.

இன்ஸ்பெக்டர் பெத்த பெருமாள் பிள்ளை எந்தக் கட்சியைச் சேர்ந்தவர் என்று தெரிந்து கொள்வதற்காக நான் அவர் முகத்தைப் பார்த்தேன். அவருடைய முகம் இருண்ட மேகத்தால் மறைக்கப்பட்டதுபோல் ஒரு க்ஷணநேரம் கறுத்தது. மறுகணத்தில் அவர் எப்போதும் போல் புன்னகை புரிந்துகொண்டு, ஒரு பக்கத்து மீசையைத் தடவிக்கொண்டே "போஸ்டு மாஸ்டர் வைதிகத்தில் மிகுந்த பற்றுள்ளவர்போலிருக்கிறது" என்றார்.

"பறையனிடம் தீட்டு இருக்கிறது என்று நான் தங்கள் கண்முன் நிரூபித்துக் காட்டுகிறேன்" என்று கர்ஜித்தார் போஸ்டு மாஸ்டர். எனக்கு உள்ளுக்குள் பயம் தோன்றிற்று. இன்ஸ்பெக்டரையாவது நமது கட்சிக்கு இழுத்துக்கொள்வோமென்று, "தங்கள் அபிப்பிராயம் என்ன?" என்று கேட்டேன். "எனக்கு இவ்விஷயத்தில் அபிப்பிராயம் ஒன்றுமேயில்லை" என்று கையை விரித்து விட்டார் இன்ஸ்பெக்டர். தோல்வி நிச்சயம் என்று எண்ணினேன். அப்போது என் முகம் மிகவும்சிறுத்துப்போயிருக்கவேண்டும். ஆனால் கையில் கண்ணாடி யில்லாமையால் நிச்சயமாகச்சொல்வதற்கில்லை.

"இருக்கட்டும், பறையனிடம் உள்ள தீட்டைப் பிரத்தியட்சமாகக் காட்டுவதாகச் சொன்னீர்களே. அஃதென்ன?" என்று பெத்த பெருமாள் பிள்ளை கேட்டார். நான் போஸ்டு மாஸ்டருக்கு முந்திக்கொண்டு அவருடைய விஷமந்திரத்தின் வலிமையைப் பற்றிச் சொல்லிவிட்டு, 'தீண்டாதவர்' அருகில் வந்துவிட்டால் மந்திரம் பலிப்பதில்லை யென்று அவர் கூறுவதை, கேட்பவர் அவநம்பிக்கை கொள்ளும்படியாக எப்படிச் சொல்லலாமோ அம்மாதிரி சொன்னேன்.

ஆனால், அந்தோ! தெய்வமும் போஸ்டு மாஸ்டர் கட்சியையே ஆதரிக்கிறதா என்ன? நான் சொல்லி முடித்தேனோ, இல்லையோ, போஸ்மாஸ்டருக்குத் துணை செய்யவே வந்தது போல் பாம்பு கடித்தவன் ஒருவனை நாலைந்து பேர் தூக்கிக்கொண்டுவந்து போட்டார்கள். "ஐயா, காப்பாற்ற வேண்டும், இப்போது இரண்டாவது மூர்ச்சை போட்டிருக்கிறது. பெரிய சர்ப்பம். இரண்டு பற்கள் நன்குபதிந்திருக்கின்றன" என்று அவர்களில் ஒருவன் கூவினான். அப்போது நாராயணய்யரைப்பார்க்கவேண்டும்! ஐம்பது வயதுக்குமேற்பட்டவரும் மலேரியா ஜுரத்தில் அடிபட்டு பலங்குன்றித் தள்ளாடிநடப்பவருமாகிய அவரிடம்அப்போது இருபதுவயது இளைஞனுடைய சுறுசுறுப்பு காணப்பட்டது. கடைக்கு ஓர் ஆளை அனுப்பிக்கற்பூரமும் மஞ்சளும் வாங்கிக் கொண்டுவரச் செய்தார். மற்றொருவனைச் சிறு கூழாங்கற்கள் இருபத்தொன்று பொறுக்கிக்கொண்டுவரச் சொன்னார். தாம் இன்ஸ்பெக்டரிடம் உத்திரவுபெற்று எதிரிலிருந்த குளத்திற்குச் சென்று தலைமுழுகி வந்தார். அவர் ஸ்நானம் செய்துவிட்டு வருகையில் அந்தப் பக்கத்திலேயே தீண்டாதவர் யாரும் வாரதபடி பார்த்துக்கொள்ளச் செய்திருந்தார். மிக விரைவாகத் தபால் ஆபீஸ் கட்டிடத்துக்குள்ளே வந்து ஈரத்துணியுடன் உட்கார்ந்து ஜபம்செய்ய ஆரம்பித்தார். நானும் தபால் இன்ஸ்பெக்டரும் அருகில் உட்கார்ந்து ஆச்சரியத்துடன் கவனித்துக்கொண்டிருந்தோம்.

தம்முடைய அங்கவஸ்திரத்தின் ஓரத்தில் ஒரு துண்டு கிழித்து மஞ்சளில் நனைத்தார் இருபத்தொரு கூழாங்கற்களையும் அதில் வரிசையாகவும் தனித்தனியாகவும் முடிந்தார் இவ்வாறு முடிகையில் மந்திரமும் ஜபித்துக்கொண்டேயிருந்தார். சுமார் பதினைந்து நிமிஷம் இவ்வாறு ஜபம் நடந்தது. இத்தனை நேரமும் எதிரில் ஒரு தாம்பாளத்தில் பரப்பப்பட்டிருந்த விபூதியின்பேரில் கற்பூரம் இடைவிடாமல் எரிந்துகொண்டிருந்தது. ஜபம் முடிந்ததும் நாராயணய்யர் எழுந்து கூழாங்கற்கள் முடிந்த துணியை விஷந் தீண்டியவன் கழுத்தில் மாலையாகப் போட்டு முடிந்துவிட்டு, மந்திரித்த விபூதியை மேலே முழுவதும் பூசச்செய்தார். மூர்ச்சை யற்றுக் கிடந்தவனுக்குச் சில நிமிஷத்தில் பிரக்ஞை வந்தது. அரைமணி நேரத்திற்குள் முன்னிலையை அடைந்து வீட்டுக்குச் சென்றான்.

## III

போஸ்டுமாஸ்டர் எங்களைப்பார்த்துச் சொல்கிறார்:— "ஏதோ இறைவன் அருளால் இந்த மந்திரம் எனக்குச் சித்தியாயிருக்கிறது. இதனால், வேறு எத்தவகையிலும் பரோபகாரம் செய்ய இயல்பு இல்லாத நானும் பிறருக்கு உபகாரமாயிருக்கிறேன். நான் தீண்டாமை விலக்குக்கு விரோதமாயிருக்கிறேன் என்று இந்த இளைய நண்பர் என்மேல் கோபங்கொள்கிறார்—"

இப்போது இன்ஸ்பெக்டர் புன்னகை செய்தார். எனக்குப் பெரிதும் அவமானமாயிருந்தது. காந்தியைத் திட்டலாமா வென்று தோன்றிற்று.

"ஆனால் நானோ ஒரு ஜீவிய காலத்தின் அநுபவத்தின் பேரில் சொல்கிறேன். இதோ வைகுண்டத்தை எட்டிப்பார்த்தவனை இந்த மந்திரம் உயிர்ப்பித்திருக்கிறது. ஆனால் ஒரு பஞ்சமனுடைய காற்றுமட்டும் என்பேரில் பட்டிருந்தால்-என்? தூரத்திலுள்ள பறையன் ஒருவனைப் பார்த்தால் போதும்— மந்திரம்பலிப்பதில்லை. மறுபடியும் தலை முழுகிவிட்டு மந்திரிக்கவேண்டும். ஆகவே பறையனிடம் தீட்டு இல்லையென்று நான் எவ்வாறு ஒப்புக்கொள்ள முடியும்?"

தபால் இன்ஸ்பெக்டர் பெத்தபெருமாள் பிள்ளைக்கு என்ன வந்துவிட்டது? ஏன் இப்படி இடி இடி என்றுசிரிக்கிறார்? என்னுடைய தோல்வியைக்கண்டு ஆனந்தமா? அல்லது நிஜமென்றுபைத்தியம் பிடித்துவிட்டதா?

இவை ஒன்றுமில்லையென்று அடுத்த நிமிஷத்தில் தெரியவந்தது. உண்மைக் காரணத்தை அவர் வெளியிட்டார். இடிவிழுந்ததுபோல் நான் திகைத்துப் போய்விட்டேன்.

"நாராயணய்யர்! தாங்கள் பெரிதும் ஏமாந்துபோனீர்கள். மன்னிக்கவேண்டும்; நான் ஒரு பறையன்!" என்றார்.

நாங்கள் இருவரும் வாய்திறக்கவில்லை.

"நான் பறையன் என்று சொல்லிக்கொண்டு வெகுநாளாயிற்று. ஒருவருக்குமே தெரியாது. நான் பிறந்தது சிங்கப்பூரில். இளமையிலே என் பெற்றோர் இறந்துவிட்டனர். அதிர்ஷ்டவசமாகக் கொஞ்சம் பொருள் சேகரித்துவைத்திருந்தனர். அங்கேயே கொஞ்சம் கல்வியும் அளித்திருந்தனர். அவர்கள் காலஞ்சென்ற பிறகு இந்நாட்டுக்கு வந்து கலாசாலையில் படித்துத் தேறி உத்தியோகமும் பெற்றேன். பின்னர் ஒருமுறை சிங்கப்பூருக்குச் சென்று கல்யாணம் செய்துகொண்டு வந்தேன். வேறு இந்நாட்டில் எனக்கு உற்றார் உறவினர் கிடையாது. இதுவரை பறையன் என்று நான்யாரிடமும் தெரிவித்ததில்லை. தெரிவிக்கச் சந்தர்ப்பமும் ஏற்படவில்லை" என்று இன்ஸ்பெக்டர் சவிஸ்தாரமாகக் கூறினார்.

நான் ஆச்சரியக்கடலில் மூழ்கிவிட்டேன். போஸ்மாஸ்டர் சிறிது நேரம் திக்பிரமை கொண்டவர்போல் இருந்தார். பின்னர், "நல்லது. மிகவும் சந்தோஷம். ஆகவே தீண்டாதவரிடம் தீட்டு இல்லை என்று நிரூபணமாகிவிட்டது. என்னுடைய குரு கூறியதை நான் தப்பாக அர்த்தம் செய்துகொண்டிருக்கவேண்டும். சரிதான், வீட்டுக்குத் தூரமாகும் பெண்களின் தீட்டைப்பற்றியே அவர் முக்கியமாய் எச்சரிக்கை செய்தார். ஆனால் தீண்டாத வகுப்பினர் இந்தத் தீட்டு அனுசரிப்பதில்லையாதலால் அவர்களுடைய நெருக்கமும் கூடாதென்று சொன்னார். தாங்கள் நீண்ட காலமாகத் தூய வாழ்க்கை நடத்தி வருவதால் தாங்கள் அருகில் இருந்தும் மந்திரம் கெடவில்லை. எங்ஙனமாயினும், பிறப்பினால் தீட்டில்லை என்பது எனக்கு நிச்சயமாகிவிட்டது. என் கண்கள் திறந்தன" என்று தமக்குத்தாமே சொல்லிக்கொள்பவர்போல் உரைத்தார்.

அப்போது இன்ஸ்பெக்டர் சொல்வார்:— "என் கண்களும் இன்றுதான் திறந்தன. இதுவரையில் என்னுடைய பிறப்பில் ஏதோதாழ்வு இருப்பதாகவே எண்ணியிருந்தேன். நான் பறையன் என்று சொல்லிக்கொள்ள வெட்கப்பட்டேன். இத்தனை தூரம் மகாத்மா காந்தியின் பிரசாரம் நடந்த பிறகும் இந்த எண்ணம் என்னைவிட் டகலவில்லை. தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவனாயிருப்பதில் உத்தியோக முயற்சிக்குச் சாதகம் உண்டு என்று தெரிந்தும் அதை நான் பொருட்படுத்தவில்லை. ஆனால் இப்போது இறைவன் எல்லா மனிதர்களையும் ஒரு படியாகவே படைத்துள்ளார் என்பதை அறிந்து கொண்டேன். இனிமேல் என்னுடைய பிறப்பை மறைக்க அவசியமில்லை. நான் 'மனித வகுப்பைச் சேர்ந்தவன்' என்று இனி கோபுரத்தின் மீதிருந்து கூவுவேன்" என்றார்.

"பறையருக்கும் இங்கு தீயர் புலையருக்கும் விடுதலை" என்று நான் பாடினேன். காந்தியடிகள் திருநாமம் வாழ்க!

---

# பெண்ணினம்

### பெண்களின் சம்மத வயது

பெண்களின் சம்மத வயதை ஆடவர்கள் தமது புத்தியையும் மனவடக்கத்தையும் முன்னிட்டு நிலை நிறுத்தமாட்டாது சட்ட பூர்வமாக்கக்கூடிய நிலையை யடைந்திருப்பார்களே யானால் இதைக்காட்டிலும் பரிதாபகரமான நிலை தேசத்திற்கு வேறு வேண்டுமோ? சுயராச்சியத்திற் கருகதையுள்ளவர்களாக நினைக்கும் ஆடவர்களுக்குப் பெண்களின் சம்மத வயதை யறிந்து நடந்துகொள்ளக் கூடாமற் போகுமோ? இதற்கு ஒரு சட்டமும் தேவையோ? இத்தகைய சட்டமியற்றப்படுவதால் மட்டும் பெண்களுக்கேற்படக்கூடிய துன்பங்கள் தூர விலகிவிடுமோ? முற்காலத்திய புருஷ தர்மங்களை ஆடவர் சிலர் அறவே ஒழித்துவிட்டிருப்பது போன்று பெண்மக்களும் தற்சமயம் பார்யாதர்மத்தைக் கைவிட்டவர்களல்லவே. சம்மத வயதைமீறித் தன் கணவன் செய்யக்கூடிய அடாத செய்கையையோ அல்லது மிருகத்தன்மை வாய்ந்த ஆடவனாலேற்படும் துன்பத்தையோ அவள் எவ்வாறு வெளியிடத் துணிவாள்? பெண்களின் சம்மத வயது அவரவர்களின் வாசஸ்தானத்தையும் வளர்ச்சியையும் பொறுத்திருப்பினும் ஆடவர்கள் சற்று சீர்திருந்துவார்களானால் அனுஷ்டானத்தில் இதைப் பதினாறு பதினெட்டு வயதளவும் கொண்டுபோதல் சிரமமன்று. இதை விடுத்துச் சம்மத வயதைச் சட்டத்திற்குள்ளாக்கும் பக்ஷத்தில் இக்குற்றத்திற்கு ஆடவன் காரணமாகவும் பெற்றோர் உடந்தையாகவும் ஏற்படுவதுடனில்லை. ஒன்றுமறியாப் பேதைப் பெண்ணே இவ்வநீதியை வெளிப்படுத்த வேண்டியவளாகின்றாள். கோர்ட்டு முன்னிலையில் சாக்ஷியம் கூறி வைத்திய விற்பன்னரின் சோதனைக்கும் ஆளாகவேற்படும். இப்பெண்ணின் துர்த்தசையை எடுத்துரைக்கவும் வேண்டுமோ? தற்சமயம் வரதக்ஷிணையின் கொடுமையால் தக்க வரன் கிடைக்காது பெண்களின் வயதைச் சில பெற்றோர் குறைத்துக் கூறிவர வேண்டி யிருக்கிறது. இத்தகைய சட்டமியற்றப்படின் இனிப் பெண்கள் வயதை உயர்த்திக் கூறிவரத் துணிவார்களன்றி இதனால் இளஞ் சிறுமியர் பாடு புத்தியற்ற தாய் தந்தையர் நின்றும் முரட்டுச் சுபாவமமைந்த கணவனிடத்தின் நின்றும் காப்பாற்றப்படுவது நிச்சய மில்லையே. சம்மத வயதைச் சீர்திருத்த எண்ணுவோர் தற்கால நிலையை ஊன்றிக் கவனிப்பார்களானால் சின்னாட்களில் இத்தகைய சீர்திருத்தம் தானாகவே ஏற்பட்டு விடுமென்பதை யுணரலாம். அனேகமாசப் பெண்களுக்கு இப்போது பனிரண்டு வயதிற்கு மேலாகவே விவாகம் முடித்தல் சகஜமாயிருந்து வருகிறது. சிலர் பதினான்கு வயதிற்குள் பெண்களுக்கு விவாகம் முடிக்க நினைப்பதுமில்லை. காலாந்தரத்திற் பல காரணங்களைக் கொண்டு பாலிய விவாகமுறை அடியோடு நிறுத்தப்பட்டுப் பதினான்கு வயதிற்குமேல் பெண்களுக்கு விவாகம் முடித்தல் சம்பிரதாயமாகவும் சௌகரியமாகவும் ஏற்பட்டு விடக்கூடுமென்றும் ஊகிக்க இடமிருக்கிறது.

"சிந்தாமணி"

### ஸ்ரீமான் ஆண்ட்ரூசின் விரமாதா

சமீபத்தில் காக்கிநாடாவுக்கு விஜயம் செய்திருந்த ஸ்ரீமான் ஆண்ட்ரூஸ் அங்கு நடைபெற்ற பெண்மக்கள் கூட்டமொன்றில் பேசுகையில் தமது வாழ்க்கையில் ஓர் அரிய சம்பவத்தைப்பற்றிக் குறிப்பிட்டார். அதன் சாராம்சம் பின்வருமாறு:—

என் அருமைத் தாய்மார்களே! இன்று உங்களைச் சந்திக்க நேர்ந்த பாக்கியத்தைக் குறித்து மகிழ்ச்சியடைகிறேன். உங்களில் வயதில் பெரியவர்களை என்னுடைய தாய்மாராகவும், சிறியவர்களைச் சகோதரிகளாகவும் கொண்டுள்ளேன். இந்தியப் பெண்மணிகளை என்னுடைய தாய்மார்களாகவும், சகோதரிகளாகவும் கருதி நேசிக்க எனக்கு முதன் முதலில் கற்றுக்கொடுத்தவள் என்னுடைய அன்னையேயாவள்.

என தன்னை இறந்துபோய் இற்றைக்குப் பதின்மூன்று வருஷம் ஆகின்றது. அவளுடைய கடைசி நாட்களைப்பற்றி உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். அப்போது மகாத்மா காந்தி தென்னாப்பிரிக்காவில் சிறையில் இருந்தார். அவருக்கு உதவிசெய்ய உடனே தென்னாப்பிரிக்காவுக்குச் செல்லும்படி கோகலே என்னைக் கேட்டுக்கொண்டார். நானும் வெகு ஆவலுடன் போவதற்குச் சித்தமானேன். அச்சமயம் என்னுடைய தாயாரிடமிருந்து பின் வரும் தந்தி கிடைத்தது. "உடனே என்னிடம் வந்து சேர். மிகவும் அசௌக்யமாயிருக்கிறேன். எண்பது வயதுக்கு மேலாகி விட்டபடியால் விரைவில் மரணமடையக்கூடும். உயிர் விடுவதற்கு முன் உன்னை ஒருமுறை பார்க்க விரும்புகிறேன்."

இப்போது என்ன செய்வதென்று எனக்குத் தெரியவில்லை. இங்கிலாந்துக்குச்சென்று மரணத் தறுவாயிலுள்ள என் தாயாரைப் பார்ப்பதா? மகாத்மா சிறைப்பட்டிருக்கையில் தென்னாப்பிரிக்காவுக்குச் சென்று அவருக்கு உதவி செய்வதா? ஆகவே என் தாயாருக்கே தந்தியடித்துக் கேட்டேன். அவளிடமிருந்து கீழ்க்கண்ட பதில் கிடைத்தது:— "என்னைப் பார்க்க வரவேண்டாம். முதலில் தென்னாப்பிரிக்காவுக்குச்செல். அங்கு உன் கடமையைச் செய்தபிறகு என்னிடம் வா."

ஆகவே நான் தென்னாப்பிரிக்காவுக்குச் சென்றேன். அங்கு மகாத்மாகாந்திக்குத் துணையாக வேலை செய்துகொண்டிருந்த போது என்னுடைய அன்னை இறந்துபோனதாகச் செய்தி கிடைத்தது. நான் ஆறாத்துயரங்கொண்டேன். மரணத்துக்கு முன் அவளைச்சென்று பார்க்கத்தவறியதை நினைந்து நினைந்து வருந்தினேன். மகாத்மா காந்தி எனக்குப் பின் வருமாறு ஆறுதல் சொன்னார்:— "தங்கள் தாயார் பெண்கள் நாயகம். புதல்வனைப்பார்க்கப் போவாகொண்டிருந்தும் இந்திய சகோதரிகளுக்காகத் தங்களைத் தத்தம் செய்து விட்டாள். இது வன்றோ செயற்கருஞ்செயல்?" அன்று மாலை ஸ்ரீமதி காந்தியைத்தலைமையாகக் கொண்ட பன்னிரண்டு இந்தியப் பெண்மணிகள் என்னைப்பார்க்க வந்தார்கள். அவர்களனைவரும் சிறை புகுந்தவர்கள். "தங்களுடைய அன்னையை இழந்து விட்டீர்கள். எங்கள் நிமித்தம் அவளைப் பார்க்கவும் செல்லவில்லை. இனிமேல் எங்களையே தமது அன்னைமார்களாய் ஏற்றுக் கொள்ள வேண்டும்" என்றனர்.

இச்சம்பவத்திற்குப் பின் நான் எப்போது இந்தியப் பெண்மணிகளைக் கண்டாலும் என் தாயார் அங்குப் பிரசன்னமாயிருப்பதாகவே கருதுகிறேன். ஆகையால் தான் உங்களை இன்று 'தாய்மார்களே' என்று அழைத்தேன். நீங்கள் என்னை உங்கள் புதல்வனாக ஏற்றுக் கொள்ளவேண்டும்.

## மதிப்புரை

### ருவெங்கர்
அல்லது
### இரசாயன மர்மம்

இப்பெயர் வாய்ந்தநாவல் ஒன்று வரப்பெற்றோம். இதன் முதல்நூல் பிரான்சு மொழியில் ஆசிரியர் கீ. தே. தேராமோன் என்பவரால் யாக்கப்பட்டது. பிரான்சு உலகில் இந்நூலுக்குள்ள மதிப்புச் சொல்லுந்தகையதன்று. இந்நூலைப் படியாத பிரான்சுக்காரரைக் காண்டல் அரிது. இந்நூற் பொருள் நாடக அரங்கிலும், படக்காட்சியிலும் நடம்புரியும் பேறு பெற்றிருப்பதை உன்னும்போது, இதன்கண் மக்கட்குள்ள ஆர்வம் புலனாகிறது.

இத்துணைச் சிறப்பு வாய்ந்த இப்பிரான்சு நாவல் தமிழுலகிலும் ஆடல்புரிய வேண்டுமெனக்கருதி மோரிஸ் ஸ்ரீமான் சு.பெருமாள் பிள்ளை அவர்கள் இதைத் தமிழ் மொழியில் பெயர்த்தெழுதியிருக்கிறார். ஒரு மொழியினின்றும் மற்றொரு மொழியில் பெயர்த்தெழுதலின்அருமை அத்துறையிலிறங்கி உழைப்போர்க்கே தெரியும். முதல் நூலை நேரே மொழிபெயர்ப்பதினும் அதைத் தழுவி வழிநூலாக எழுதல் எளிது. ஸ்ரீமான் பெருமாள்பிள்ளை பிரான்சிலுள்ளவாறே சொன்னோக்கும் பொருணோக்குங் குலையாவாறு இந்நூலைத் தமிழில் பெயர்த்தெழுதும் அருமுயற்சியில் தலைப்பட்டு உழைத்திருக்கிறார். சில விடங்களில் பிரஞ்சு சொற்றொடர்களுக்கியைந்த தமிழ்ச்சொற்றொடர்களைப் பெய்திருப்பது எமது கருத்தை யீர்த்தது. அவ்விடங்களில் தமிழணங்கு பிரன்சுகோலந் தாங்கியிருப்பது போல் தோன்றுகிறது. மறு பதிப்பில் அக்கோலங் களையப்படலாம்.

ஸ்ரீமான் பெருமாள் பிள்ளை மோரீவில வதிந்தும தாய்மொழிப் பற்றுக் கொண்டு, அம்மொழிபயின்று, புலமை பெற்றுப், பிரன்சிலுள்ள ஒரு பெரிய காவலைத் தாய்மொழியில் பெயர்த்தெழுதி இந்நூலைத் தமிழுலகுக்கீந்த அவரன்பிற்குத் தமிழுலகம் பெரிதுங் கடமைப்படல்வேண்டும்.

நூலின் உள்ளுறை ஒரு வழியிலன்று; பல வழியிலும்—மனதிற்கமுதாகிறது என்றுசுருக்கச் சொல்லலாம். காதலின் தோற்றம், அதன்நிலை, அதன் முடிவு என்னும் மூன்றையும் இந்நூலிற் காணலாம்; நிகழ்ச்சிகள் முன்னே நடைபெறுதல்போலக் காணலாம். காதலைக காதலாகக் காணலாம்; சோகத்தைச் சோகமாகக் காணலாம்.

இந்நூலுக்குத் தமிழ் மக்கள் ஆதரவுநல்கவேண்டுமென்று நாம் கூறவேண்டுவதில்லை.

விலை ரூபா 1—8—0. விற்குமிடங்கள்: M. R. சந்திரகூட ஐயர், 14, பள்ளியப்பன் தெரு, மதராஸ். ஸ்ரீமதி. பெரிய நாயகத்தம்மாள், 2-3, அரத்தூண்ரோட், மதராஸ். M. S. கோவிந்தசாமி பிள்ளை, 278, சென்றல் மார்க்கெட், போர்ட்லூயிஸ், மோரிசியஸ்.

## அகில இந்திய நூல் நூற்போர் சங்கம்

### அமைப்பும் விதிகளும்

சென்ற வாரத்து "யங் இந்தியா"வில் அகில இந்திய நூல் நூற்போர் சங்கத்தின் அமைப்பும் விதிகளும் முடிவாகத் தீர்மானிக்கப் பட்டபடி பிரசுரிக்கப் பட்டிருக்கின்றன. இதற்குமுன் பத்திரிகைகளில் பிரசுரிக்கப்பட்ட விவரத்திலிருந்து இவை பல அம்சங்களில் மாறுபடுவதால், சுருக்கமாய்க் கீழே பிரசுரிக்கின்றோம்:—

நூல் நூற்றல், கதர் இவற்றின் அபிவிருத்திக்காக ஒரு திறமையான ஸ்தாபனம் ஏற்படுத்துவதற்குக் காலம் வந்துவிட்டபடியாலும், அரசியல் மாறுதல்களால் பாதிக்கப் படாத நிரந்தரமான ஒரு ஸ்தாபனம் இன்றி மேற்கண்ட அபிவிருத்தி ஏற்படாதென்று அநுபவத்தில் தெரியவந் திருப்பதாலும், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் சம்மதத்துடன் அகில இந்திய நூல் நூற்போர் சங்கம் என்னும் இந்த ஸ்தாபனம் அமைக்கப்படுகிறது. இது காங்கிரஸ் ஸ்தாபனத்திற்குள் ஒரு தனிப்பட்ட உறுப்பாகவும், தனி அதிகாரங்கள் படைத்ததாகவும் இருக்கும்.

இச்சங்கம் அங்கத்தினர், சகாக்கள், நன்கொடையாளர் இவர்களடங்கியதா யிருக்கும். கீழ்க்கண்ட அங்கத்தினர் அடங்கிய நிர்வாக சபை ஐந்து வருஷங்களுக்கு வேலைசெய்யும்.-

1. மகாத்மா காந்தி
2. மௌலானா ஷௌகத் அலி
3. இராஜேந்திர பிரஸாத்
4. சதீச சந்திரதாஸ் குப்தா.
5. மகன்லால் கே. காந்தி
6. ஜம்னாலால் பஜாஜ் (பொக்கிஷதார்)
7. ஷுவாயிப் குரேஷி } காரியதரிசிகள்
8. சங்கர்லால் பாங்கர் } காரியதரிசிகள்
9. ஜவஹரிலால் நேரு

### நிர்வாகசபையின் அதிகாரங்கள்

அகில இந்திய கதர்போர்டுக்கும், மாகாண கதர் போர்டுகளுக்கும் தற்போது சொந்தமாயுள்ள சகல சொத்துக்களையும் மேற்கண்ட நிர்வாக சபையார் எடுத்துக்கொள்வர். மேற்சொன்ன சொத்துக்களின் நிர்வாக விஷயத்தில் அவர்களுக்குப் பூரண அதிகாரம் இருக்கும். கடன்வாங்கவும், சந்தாவசூலிக்கவும், ஸ்தாவர சொத்துக்கள் வைத்துக்கொள்ளவும், கதர் அபிவிருத்திக்காகக் கடன் நன்கொடை முதலியவை கொடுக்கவும், நூற்க்கக் கற்றுக் கொடுக்கப்படும் பள்ளிக்கூடங்களை நடத்தவும், உதவி செய்யவும், கதர்க் கடைகள் நடத்தவும், கதர்த்தொண்டர் படைஒன்று நிர்மாணிக்கவும், காங்கிரஸின் சார்பாகக் காங்கிரஸ் அங்கத்தினரின் நூல்சந்தாவை வாங்கிக்கொண்டு, அத்தாட்சிப்பத்திரம் கொடுக்கவும், சங்கநோக்கம் நிறைவேறுவதற்கான இன்னும்மற்ற எல்லாக்காரியங்களையும் செய்யவும், சங்கத்தின் தற்போதைய அமைப்பையும் விதிகளையும் உசிதம் போல் அவ்வப்போது மாற்றிக்கொள்ளவும் மேற்கண்ட நிர்வாக சபைக்கு அதிகாரம் உண்டு.

நிர்வாக சபையில் மரணத்தினாலோ, மற்ற காரணங்களினாலோஏற்படும்காலிஸ்தானங்களை மற்றஅங்கத்தினரே பூர்த்திசெய்து கொள்வார்கள். நிர்வாகசபைக்குஇன்னும் சில அங்கத்தினரையும் அவர்கள் சேர்த்துக்கொள்ளலாம். ஆனால் மொத்தம் அங்கத்தினரின் தொகை பன்னிரண்டுக்குமேல் போகக்கூடாது.

சந்தா, நன்கொடை முதலியவற்றிற்குச்சரியான கணக்குவைத்திருக்கவேண்டும்- மூன்று மாதத்திற்கொருமுறை கணக்குகள் அதிகாரம் பெற்ற பரிசோதகர்களால் பரிசீலனை செய்யப்படும்.

### காங்கிரஸ் நூல்சந்தா

சங்கத்தின் தலைமைக் காரியாலயம் சபர்மதி சத்தியாக்கிரஹ ஆசிரமத்தில் இருக்கும். காங்கிரஸில் நூற்சந்தா அங்கத்தினராக இருக்கவிரும்புவோர் தங்கள்சந்தாவை இந்தக் காரியாலத்துக்கு அனுப்பவேண்டும். நூலுடன் எந்தக் காங்கிரஸ் கமிட்டியில் அங்கத்தினராக இருக்கவிரும்புகிறார் என்பதையும், வயது, தொழில், விலாசம், நூலின் நீளம், நிறை இந்த விவரங்களையும் தெரிவிக்கவேண்டும்.

சந்தா கிடைத்ததும் காரியதரிசி பரிசோதித்து நூல், திருப்திகரமாயிருந்தால் சம்பந்தப்பட்ட காங்கிரஸ் கமிட்டிக்கு ஓர் அத்தாட்சிப் பத்திரமும், சந்தாதாரருக்கு அதன் நகல் ஒன்றும் அனுப்பிவைப்பார்.

### சங்கத்தின் அங்கத்தினர்

நூல் நூற்போர் சங்கத்தின் சாதாரண அங்கத்தினர் இரண்டு வகுப்பினராக இருப்பர். (1) A வகுப்பு அங்கத்தினர் பதினெட்டு வயதிற்கு மேற்பட்டவர்களாயும், வழக்கமாகக் கதர் அணிபவர்களாயும் இரு[illegible] மாதம் சமமானதும், முறுக்[illegible] சொந்தமாய் நூற்றது மான நூல் ஆ[illegible] கஜம் பொக்கிஷதாருக்கோ அல்லது வேறு அதிகாரம் பெற்றவருக்கோ அனுப்பி வரவேண்டும். (2) B வகுப்பு அங்கத்தினர் வருஷத்திற்கு 2000 கஜம் நூல் அனுப்ப வேண்டும். முதல் வகுப்புக்குரிய மற்ற நிபந்தனைகளை இவர்களும் அநுசரிக்க வேண்டும். காங்கிரஸ் அங்கத்தினராவதற்காக அனுப்பும் நூலும் இச்சங்கத்தின் சந்தாவின் பகுதியாகக் கருதப்படும்.

### அங்கத்தினரின் உரிமைகளும் கடமைகளும்

நூல் நூற்றல், கதர் இவைகளைப் பரவச் செய்வதற்காகப் பிரசாரம் செய்வது இரு வகுப்பு அங்கத்தினருடையவுங் கடமையாகும். தற்போதுள்ள நிர்வாக சபையின் காலம் முடிந்த பிறகு நிர்வாகசபை அங்கத்தினரைத் தேர்ந்தெடுக்கும் உரிமை சங்கத்தின் அங்கத்தினருக்கு உண்டு. ஆனால் நிர்வாக சபைக்குத் தேர்ந்தெடுக்கப் படுவோர் A வகுப்பு அங்கத்தினராயிருத்தல் வேண்டும். ஐந்து வருஷத்திற்குப் பிறகு அங்கத்தினர் கூட்டங்கூடி, கூட்டத்துக்கு வந்தவர்களில் முக்கால் பங்கு அங்கத்தினரின் சம்மதத்தின்பேரில் சங்க அமைப்பை மாற்றிக் கொள்ளலாம்.

எந்த மாகாணத்திலாவது 50 அங்கத்தினர் சேர்ந்துவிட்டால், அவர்கள் முதல் வகுப்பு அங்கத்தினரிலிருந்து ஐந்து பேரை மாகாண ஆலோசனைக் கமிட்டியாகத் தேர்ந்தெடுக்கலாம். மாகாணத்தைப் பொறுத்த வரையில் இக்கமிட்டியார் அகில இந்திய நிர்வாக சபைக்கு யோசனை சொல்வார்கள்.

### சகாக்கள்

வழக்கமாகக் கதர் அணிவோர் வருஷ சந்தா ரூபா பன்னிரண்டு கட்டினால் சங்கத்தின் சகாக்கள் ஆவார்கள். ஜீவிய சகாக்கள் ஆவதற்கு மொத்தமாய் ரூபா ஐந்நூறு கட்டிவிட வேண்டும். சங்கத்தின் கணக்கு அறிக்கைகள் நடவடிக்கைகள் ஆகியவற்றின் நகல்கள் இவர்களுக்கு இலவசமாக அனுப்பி வைக்கப்படும்.

### அங்கத்தினராக விரும்புவோர் கவனிக்க

நூற்போர் சங்கத்தில் அங்கத்தினராக விரும்புவோர் அடியிற்கண்ட மூன்று விஷயங்களைக் கவனிக்கவேண்டுமென்று மேற்படி சங்கக் காரியதரிசிகள் தெரிவிக்கின்றனர்:—

I. கீழ்க்கண்ட நமூனாவின்படி விண்ணப்பம் செய்துகொள்ளவேண்டும்:—

அகில இந்திய
நூற்போர் சங்கக் காரியதரிசிக்கு,
சபர்மதி,

ஐய,

மேற்கண்ட சங்கத்தின் விதிகளை நான் படித்துள்ளேன். நான் இச்சங்கத்தின் ......வருப்பு அங்கத்தினன் / சகா ஆக விரும்புகிறேன்.

இத்துடன்.........சந்தாவை அனுப்பியுள்ளேன். தயவு செய்து என்னை ஓர் அங்கத்தினனாய்ப் பதிவு செய்து கொள்ளவும்.

தங்கள்

கையெழுத்து.

II. சந்தா நூல் நேராக சபர்மதிக்கு அனுப்பப்படவேண்டும்.

III. அடியிற்கண்ட விவரங்கள் அடங்கிய ஒரு சீட்டு நூலுடன் சேர்த்து அனுப்ப வேண்டும்.

(1) பெயர், விலாசம், தாலூகா, மாகாணம்.

(2) சந்தா எந்த மாதத்திற்கு?

(3) நூலின் நீளம், நிறை, நம்பர், ஒரு சுற்றின் நீளம், பருத்தி வகை ஆகிய விவரங்கள்.





# தொழிலாளர் இயக்கம்

### நாகை ரெயில்வே தொழிலாளர் சங்க ஆண்டு விழா.

நாகை ரெயில்வே தொழிலாளர் சங்க ஏழாம் ஆண்டுவிழா சென்ற ஞாயிற்றுக்கிழமை (4-10-25) நாகை நாடகக்கொட்டகையில் நடைபெற்றது. ஸ்ரீமான் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் தலைமைவகித்தார். வழக்கம் போல உபசாரப்பத்திரம்வாசித்தல் அறிக்கைப் பத்திரம் படித்தல் முதலியன முடிந்தவுடன் சங்க ஸ்தாபகரும் முதல் அக்கிராசனருமாகிய காலஞ்சென்ற பக்கிரிசாமிபிள்ளையின் பிரிவாற்றாமை குறித்து இரங்கற்பாக்கள் பாடப்பெற்றன. பின்னைத் தலைமைவகித்த முதலியார் சுமார் ஒருமணி நேரம் முன்னுரை நிகழ்த்தினார். திரு. வி. கலியாணசுந்தர முதலியார் உலகில் தொழிலாளர் நிலை, இந்தியத் தொழிலாளர் நிலை, நாகைத் தொழிலாளர் நிலை என்று மூன்று கூறாகத் தொழிலாளர் நிலை பிரித்துப்பேசினார். அவர் ஐரோப்பா யுத்தத்தின் பின்னரே உலகில் தொழிலாளர் கண்விழித்துத் தமது உண்மை நிலையுணர்ந்தனரென்றும், அவ்வத் தேசத்திலுள்ள முதலாளிகள் நலத்தின் பொருட்டுத் தொழிலாளர்கள் போர் முனையில் உயிர் துறத்தல் அறியாமை என்றும், உலகிலுள்ள தொழிலாளர்கள் ஒன்றுபட்டுத் தங்களுக்குள் சகோதரத்துவத்தை வளர்த்துக் கொள்வரேல் முதலாளிகள் ஆக்கமழியுமென்றும், அவ்வழியால் உலகில் அமைதி ஏற்படுமென்றும் தொழிலாளர்கள் உணர்ந்து ஒற்றுமைப்பட்டு வருகிறார்களென்றும், இப்பொழுது ஏற்பட்டுள்ள உலக தொழிலாளர் இயக்க நோக்கம் ஒன்றாயினும், கடைப்பிடிக்கும் முறைகளில் வேற்றுமையுண்டென்றும், முதலாளிகள் செல்வாக்கைக் கொலைத் தொழிலால் நசுக்கவேண்டுமென ஒரு கூட்டத்தாரும், அத்தொழிலில் தலைப்படாது நியாய வழியில் முதலாளிகளின் அரச அமைப்பு முதலியவற்றைக் கைப்பற்றி முதலாளிவர்க்கத்தை நிர்மூலப்படுத்தவேண்டுமென மற்றொரு கூட்டத்தாருமாகப் பிரிந்திருக்கிறாரென்றும், முன்னவரைப் போல்ஷ்விக்கரென்றும், பின்னவரை நியாய வரம்பினரென்றும் உலகங் கூறுகிறதென்றும் பின்னவரையே மிஸ்டர் மக்டானல்ட், கர்னல் வெட்ஜ்வுட் முதலியோர் ஆதரிக்கின்றாரென்றும், உலகில் பல பாகங்களில் முன்னவர் பிரசார வேலையும் நடந்து வருகிறதென்றும், சமீபத்தில் லிவர் பூலில் கூடிய தொழிலாளர் மகாநாட்டில் பொதுஉடைமைக் கட்சிக்காரர் விலக்கப்பட்டாரென்றும்பேசி, சக்லத்வாலா அமெரிக்க அதிகாரிகளால் தடுக்கப்பட்டது, ஜப்பானில் ருஷ்யப் பொதுவுடைமைக் கட்சித் தலைவர் சிலர் போந்தபோது அங்கே அதிகாரிகள் நடந்துகொண்டமுறை முதலியவற்றைக் குறிப்பிட்டு இந்தியத் தொழிலாளர் நிலையை விரித்துக் கூறினார். இந்தியாவில் தொழிலாளர் சங்கங்கள் தோன்றிய விதத்தையும் அவைகளை யொடுக்க முதலாளிகள் முயன்றதையும் குறிப்பிட்டுத் தற்போது இந்திய சட்டசபையில் தலைகாட்டியுள்ள தொழிலாளர் மசோதாவைப்பற்றிச் சிறிது நேரம்பேசி, பம்பாய் தொழிலாளர் துயர்குறித்து இரங்கி, நாகைத் தொழிலாளர் சங்கத்தின் முன்னிலையையும் தற்கால நிலையையும் விளங்க ஓதி, பொதுவாக இந்தியாவில் ஒழுங்குபட்ட சங்கங்கள் இன்னும் ஏற்படவில்லை என்று கூறினார். திரு. முதலியார் தொழிலாளர்கள் தங்களுக்குள் ஒரு கட்சி ஏற்படுத்திக் கொள்ளாது மற்ற அரசியல் கட்சிகளோடுசேர்வதால் அவர்களுக்குள் பிளவு நிகழ்வதைத் தேர்தல் காலங்களில் தாம் கண்டு வருவதாகவும், எந்த அரசியல் கட்சியிலும் முதலாளிகள் உண்டென்றும், தொழிற் பெண்மக்கள் பிரசவ மசோதா இந்திய சட்டசபையில் தோல்வியுற்ற காரணத்தைத் தொழிலாளர்கள் கவனிக்கவேண்டுமென்றும், முதலாளிகளடங்கிய எந்த அரசியல் கட்சியும் தொழிலாளரை மனமார ஆதரியாதென்றும், ஆதலால் தொழிலாளர்கள் தங்களுக்குள் ஓர் அரசியல் கட்சி காண வேண்டுமென்றும், வலியுறுத்திப் பின்னை ஒற்றுமை, மதுவிலக்கு, கல்வி, உடலோம்பல் முதலியவற்றைப் பற்றிப் பேசி முடித்தார். பின்னை ஸ்ரீ காக்தரை உலகத்தொழிலாளர் இயக்கத்தைப் பற்றிச் சிறிதுநேரம் பேசித் தென்னிந்தியரெயில்வே தொழிலாளர் அமைப்பைப் பற்றிக் கூறி வெளியார் நிர்வாக சபையிலில்லாதிருந்தால் ஏஜெண்ட் சங்கத்தை அங்கீகரிக்கச் சித்தமாயிருப்பதாக எடுத்துக் காட்டினார். பின்னை தஞ்சை ஸ்ரீமான் வேங்கடகிருஷ்ண பிள்ளையவர்கள் ஒற்றுமையைப்பற்றிச் சிறிது நேரம் பேசினதும் இரண்டு தொழிலாளர் சுருங்கச் சில உரை பகன்றார். முடிவில் சங்க அக்கிராசனர் வந்தன வாழ்த்துக்கூறச் சபை இனிது முற்றுப்பெற்றது.

### பம்பாய்த் தொழிலாளர்

பம்பாயில் வேலை நிறுத்தம் செய்த தொழிலாளரில் கிராமங்களுக்குத் திரும்பியவர்போக எஞ்சியவர் மிகுந்த கஷ்டமடைந்திருக்கிறார்கள். பலர் நகை முதலியவற்றை அடகு வைத்துக் கடன் வாங்கியிருக்கிறார்களாம். போதாதற்கு அநேகர் மலேரியா ஜுரத்தினால் பீடிக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. தொழிலாளரில் சிலர் வேலைக்குத் திரும்பிவர விருப்பந் தெரிவித்ததின்பேரில் இரண்டொரு மில்கள் திறக்கப்பட்டன. இவ்வாறு சுமார் 900 தொழிலாளர்வரையில் வேலைக்குத் திரும்பியிருக்கின்றனர். ஆனால் முதலாளிகள் மறுபடியும் சம்பளத்தை உயர்த்தினாலன்றி தீபாவளிக்குமுன்னால் அதிகம் பேர் வேலைக்குத் திரும்பமாட்டார்களென்று தெரிகிறது.

பம்பாய் அரசாங்கத்தார் தந்தி யடித்ததின் பேரில் ஆலை முதலாளிகள் சங்கத்தின் காரியதரிசியும், உப அக்கிராசனரும் கவர்னரைப் பேட்டி காணச்சென்று திரும்பினார்கள். முடிவு இரகசியமாயிருக்கிறது.

பம்பாய் நகர சபையின் விசேஷக் கூட்டத்தில் பருத்தி எதிர்வரியை எடுத்துவிடும்படி பம்பாய் அரசாங்கம் வற்புறுத்த வேண்டுமென்றும் வேலை நிறுத்தம் முடிய இதுதான் வழியென்றும் தீர்மானித்தனர். பருத்தி எதிர்வரியை எடுத்துவிட்டால் சம்பளம் குறைப்பதில்லையென்று முதலாளிகள் எழுத்து மூலமாக எழுதிக் கொடுத்திருப்பதாக விவாதத்தின் போது எடுத்துக் காட்டப்பட்டது.

வேலை நிறுத்தத்தின் பயனாகக் குவிந்திருந்த சரக்குப் பெரிதும் குறைந்து விட்டதாகவும், முதலாளிகள் சிலர்வேலை ஆரம்பிக்க விரும்புவதாகவும் சொல்லப்படுகின்றன.

பருத்தித் தொழிலின்மீது விதிக்கப்பட்டிருக்கும் எதிர் வரியை எடுத்துவிடவேண்டுமென்று பம்பாய் அரசாங்கத்தார் இந்திய அரசாங்கத்துக்குச் சிபார்சு செய்யப்போவதாக இந்தியன் டெயிலி மெயில் பத்திரிகை கூறுகிறது. பம்பாய் அரசாங்கத்தின் இத்தீர்மானத்தை முன்னிட்டு ஆமதாபாத் ஆலை முதலாளிகள் தொழிலாளர் சம்பளம் குறைக்கும் விஷயத்தை ஒத்தி வைத்திருக்கிறார்களாம்.

பம்பாய் மத்திய தொழிற்சங்கத்தார் சம்பளம் குறைப்பதைக் கண்டித்தும், தொழில் நிலைமையைப்பற்றி விசாரிக்க ஒருகமிட்டியை ஏற்படுத்தும்படி அரசாங்கத்தை வேண்டியும் தீர்மானங்கள் செய்திருக்கின்றனர்.

பம்பாய் கிரானிகல் பத்திரிகை நிருபர் ஆலை முதலாளி ஒருவரைக் கண்டு பேசியதில், பதினொரு கோடி ரூபா பெறுமான சரக்கு கையில் தங்கிவிட்டதால் முதலாளிகள் வேண்டுமென்றே வேலை நிறுத்தத்துக்கு வழி இசைந்தார்களென்றும், கட்டுக்கடைச் சரக்குகள் கழிந்துவிட்டால் மீண்டும் தொழிலாளர் முன் சம்பளத்துக்கே எடுத்துக்கொள்ளப்படுவார்களென்றும் சொன்னாராம்.

### வெளிநாட்டுத் தொழிலாளர்

இங்கிலாந்திலுள்ள தொழிலாளர்கள் அனைவரும் சேர்ந்து வேலைநிறுத்தம் செய்தால், ஜீவாதாரமான தொழில்கள் நிற்காமல் நடப்பதற்கு முன் கூட்டியே ஏற்பாடுகள் செய்வதற்கு ஒரு சங்கம் ஏற்பட்டிருக்கிறதாம். இதற்கு அரசாங்கத்தின் ஆதரவு இருக்கிறதென்பது மந்திரி ஸர் ஜான்சன் ஹிக்ஸின் கடிதமொன்றிலிருந்து தெரியவருகிறது.

சமீபத்தில் நடந்த தொழிற்கட்சி மகாநாடு தொழிலாளர் நன்மைகளைப் புறக்கணித்துவிட்டதென்றும், லிபரல் கட்சிக் கொள்கைகளையொட்டிய தீர்மானங்களே நிறைவேறின வென்றும், இக்கூட்டத்தின் நடவடிக்கைகள் முதலாளிகளுக்குத்திருப்தியளித்திருக்குமென்றும் பிரிட்டிஷ் சமுதாயக் கட்சியினர் விடுத்துள்ள ஓர் அறிக்கையில் கூறுகிறார்கள்.

பிரிட்டிஷ் கப்பல் தொழிலாளர் வேலை நிறுத்தம் இன்னும் முடிந்த பாடில்லை. ஆயினும் சில கப்பல்கள் ஓடிக்கொண்டு வருகின்றன. கேப்டவுனில் 130 வேலை நிறுத்தக்காரர்கள் ஒரு மாதம் காவல் தண்டனை விதிக்கப்பட்டனர்.

கல்கத்தா-லாத்தயா என்னும் கிராமத்தில் எளிய குடும்பத்தில் இயற்கை வனப்பு செறிந்த 13 வயதுடை நங்கைவதிந்து வந்தாள். அவள் வீட்டெதிருந்த இரு வாலிபர் அவள் அழகால் விழுங்கப்பட்டவர்களாகி அவள் வெளிவருந்தருணம் தூக்கிச் சென்று பலாத்காரமாகத் தம் விருப்பத்தை நிறைவேற்றிக்கொண்டு மூர்ச்சையுற்ற நிலையில் அவளை விட்டுப்போயினராம்.

## ஆப்கன் மன்னரின் சுதேசியப்பற்று

### தேச முன்னேற்றத்தில் அவர்க்குள்ள சிரத்தை

"ஆசியா" என்னும் பத்திரிகையில் லாவல் தாமஸ் என்பவர் தமது காபூல் பிரயாணத்தைப் பற்றி ஒரு கட்டுரை வரைந்துள்ளார். அதிலிருந்து சில முக்கியமான பாகங்களைக் கீழே பிரசுரிக்கிறோம்:—

டுபீக் பே என்பவர் சிவந்த தலையும் நீலக் கண்களும் படைத்த ஒரு துருக்கி இளைஞர். அவர் அணிந்திருந்த உடை ஏற்கனவே அவரைவிடக் குட்டை மனிதன் ஒருவனால் அணியப்பட்டதுபோல் தோன்றிற்று. கால் சட்டை முழங்கால்களுக்கும் கணுக்கால்களுக்கும் இடையே நின்றுவிட்டது. துணியோ சுத்த 'மோடா'. அவருடைய உடையை நான் உற்றுப்பார்த்தபோது அவர் சிரித்துக்கொண்டு பின் வருமாறு கூறினார்:—

"ஐய, என்பேரில் தப்பில்லை. எங்கள் அரசர் சுதேசித் தொழில்களை விருத்தி செய்வதில் நம்பிக்கை கொண்டவர். இந்த உடை அவருடைய புது ஏற்பாடு. அவருடைய அரண்மனையில் கொஞ்ச காலம் இருப்பவர்கள் யாராயினும் - அதிலும் அரசாங்க உத்தியோகத்தில் உள்ளவர்கள் இக்காட்டில் உற்பத்தியாகும் துணிகளைத் தான் அணிந்துகொள்ள வேண்டுமென்று வற்புறுத்துகிறார். சுதேசித் தொழிலுக்குக் காப்பளிப்பதில் அவர் திடமான அபிப்பிராயம் உள்ளவர். ஜனங்களைத் தமது விருப்பத்துக் கிணங்கும்படி செய்ய அவர் ஒரு புதிய முறையைக் கையாளுகிறார். கூரிய பேனாக்கத்தி ஒன்று எப்போதும் அவர் சட்டைப் பையில் இருக்கும். அந்நிய நாட்டுத் துணியாலான உடையை நீர் அணிந்துகொண்டிருப்பதைப் பார்த்துவிட்டால், அவர் நீர் தேறெங்கேயாவது பார்த்துக்கொண்டிருக்கும்போது பின்னால் வந்து விளையாட்டாக ஒரு பெரிய துவாரம் செய்துவிடுவார்! இவ்வாறு இரண்டு மூன்று முறை உமது உடையில் அவர் துவாரம் போட்டுவிட்டால் பின்னர் சுதேசி ஆடையில் உமக்குத்தானே பிரியம் ஏற்பட்டுவிடும். அப்புறம் சர்க்கஸ் ஆட்டத்தில் விதூஷகன் உடை தரிப்பதைப்போல் தரித்துக்கொள்ளவும் தயாராயிருப்பீர்."

பின்னர் அவரையும் என்னுடைய மோட்டாரில் ஏற்றிக்கொண்டுஅரண்மனையை நோக்கிச் சென்றோம். சிறிதுநேரம்காத்திருந்தபின்னர் அமீரவர்களுக்குப்பேட்டிகொடுக்கத் தயாராயிருக்கிறாரென்று அறிவிக்கப்பட்டது. அடுத்த நிமிஷம் அமீருடைய பூங்காவனத்திற்பிரவேசித்தோம். புஷ்பங்களுக்குமத்தியில் அமீர் தமது சகோதரர்கள், நண்பர்கள் புடைசூழ நின்று கொண்டிருந்தார். எங்களைக் கண்டதும் ஐந்து ஆறு அடிமுன் வந்து வரவேற்றார். அவர் காலில் அணிந்திருந்த ஜோடுகள் முதல்தலைப்பாகைவரையில்எல்லாம் நாட்டு உடைகளே. சிறிதும் ஆடம்பரமற்ற உடைகள். அவர் முகத்தில் சந்தோஷமும் சுறுசுறுப்பும் காணப்பட்டன.

* *

"தங்களுடைய ஆட்சியில் நாட்டில் சமாதானம் நிலவும். காபூல் சர்வகலாசாலைக்காகத் தாங்கள் நிர்மாணித்துவரும் கட்டிடங்களை வழியில் பார்த்தேன்" என்றேன்.

"கல்விப் பெருக்கின் அவசியத்தை நாங்கள் நன்கு அறிந்திருக்கிறோம். ஆனால் அபிவிருத்தி மெதுவாகவே இருக்கும். என்மனைவி பெண்குழந்தைகளுக்கு ஒரு பள்ளிக்கூடம் ஏற்படுத்தியிருக்கிறாள். இப்பள்ளிக் கூடத்தில் இப்போது 2000 பெண்கள் படித்திருக்கிறார்கள். இக்காட்டில் சிறந்த மனிதர்களுக்கும், சிறந்த பொருள்களுக்கும் குறைவில்லை. ஆனால் இன்னும் பண்படுத்தப்படாத நிலைமையிலிருக்கின்றன. உலகமுழுவதிலிருந்தும் நிபுணர்களைத் தருவித்து என்னுடைய திட்டங்களை நிறைவேற்ற உத்தேசித்திருக்கிறேன். ஆனால் ஒரு விஷயம். ஆப்கானின் தானம் ஆப்கானியர்களுக்கே. எங்களுடைய நாட்டுவளத்தையும், நாட்டாரின் உழைப்பையும் வெளிநாட்டு முதலாளிகள் அடித்துக் கொண்டுபோக விடமாட்டேன்." இவ்வாறு சொல்லி, தமது உறுதியைக் காட்டுமாறுபோல் அமீர் பற்களைக் கடித்தார்.

"தங்களுக்கு நிரம்ப வேலை யிருக்கும்" என்று கூறினேன்.

அவருடைய மாமனார் மகமத பெக் தார்ஸி சொன்னார்:— "அவர் சிம்மாசனம் ஏறியபிறகு இன்றுதான் முதன் முதல் ஓய்வு எடுத்துக் கொண்டிருக்கிறார். அதிகாலையில் தினந்தோறும் எழுந்து குதிரை சவாரி செய்து வருவார். பின்னை நாள் முழுவதும் - இரவு வெகு நேரம் வரையிலும் கூட - அரசாங்கக் காரியங்களைக் கவனிக்கிறார். நல்லொரு விஷயத்தையும் அவர் தாமே மேற்பார்வை செய்கிறார்."

"நானும் என்னுடைய மாமனாரும் சேர்ந்து ஒரு திட்டம் தயாரித்திருக்கிறோம். அதன்படி வருஷந்தோறும் சில மாணவர்கள் பர்லின் முதலிய இடங்களுக்குச் சென்று படித்துவருவார்கள். சில வருஷங்களில் எங்கள் நாட்டிலுள்ள நிலக்கரி, இரும்பு, மண்ணெண்ணெய் முதலிய வைகளை எடுப்பதற்கு எங்கள் நாட்டிலேயே ஓர் இஞ்சினீயர் கூட்டம் தயாராகிவிடும்" என்று அமீர் கூறினர்.

"உங்களுக்குப் பூரண சுவதீனம் கிடைத்ததின் பயனாய் பிரிட்டிஷார் வருஷந்தோறும் கொடுத்து வந்த பெருந் தொகை போய் விட்டதே! இதனால் தங்கள் பொருள்நிலையில் பாதகம் ஏற்படவில்லையா?" என்று கேட்டேன்.

இதற்கு அவர் பதில்சொல்லவில்லை. அவருடைய மந்திரிகளில் ஒருவர் பின்வருமாறு சொன்னார்:—"எங்கள் பொக்கிஷத்தின் நிலைமை இப்போதுதான் திருப்திகரமாக இருக்கிறது. அந்நியநாட்டாரின் உதவியின்றியே இப்போது வரவையும் செலவையும் சரி செய்துகொண்டிருக்கிறோம். கானூஸியாம் டாலர் வருமானமிருந்தாலும் இனிமேல் பழைய நிலைமைக்குப் போக விரும்பமாட்டோம். ஏனெனில், பிரிட்டனிலிருந்து கடன் வாங்குவதற்குப் பதிலாக இப்போது எங்களுடைய தேவைக்கு நாங்களே பணம் சம்பாதித்துக்கொள்ளக் கற்றுக் கொண்டுவிட்டோம்."

### கணிதமேதாவி ஸ்ரீமான் சோமேச சந்திரவசு

மனக்கணக்கு போடுவதிலும், ஞாபகசக்தியிலும் உலகில் தமக்கு நிகர் இல்லை என்று சொல்லும்படி ஆற்றல் படைத்த ஸ்ரீமான் சோமேச சந்திரவசு உலக முழுவதிலும் சுற்றித் தமது திறமைகளைக் காட்டியபின்னர் வங்காளத்துக்குத் திரும்பியுள்ளார் என்று 'இங்கிலீஷ்மான்' பத்திரிகை கூறுகிறது. அவரைப் பற்றி அடியிற்கண்ட விவரங்களும் மேற்படி பத்திரிகையில் காணப்படுகின்றன. ஸ்ரீமான் வஸு தமது குழந்தைப் பருவத்திலேயே அபார ஞாபகசக்தி உடையவராயிருந்தாராம். எட்டாவது வயதில், காகிதம் பென்சில் உதவியின்றி 14 இலக்கங்கள் உள்ள இரண்டு எண்களை மனதினாலேயே பெருக்கிச்சொல்வாராம்! பின்னர் இந்த ஞாபகசக்தியை மேலும் விருத்திசெய்து ஒவ்வொன்றிலும் 60 இலக்கங்களுள்ள இரண்டு எண்களை மனதினால் பெருக்கிச் சொல்லும் திறமை பெற்றார்.

ஒரு பெரிய எண்ணைக்கொடுத்து அந்த எண்ணை இரண்டு முறை பெருக்கினால் இப்பெரிய எண் வருமென்று கேட்டால் அவர் உடனே சொல்வார். இவ்வாறே அந்த எண்ணைப் பதினேந்து முறை பெருக்கினால் ஒரு குறிப்பிட்ட பெரும் எண் வரும் என்றால் அவர் போட்டுவிடுவார். ஏதாவது ஒரு வருஷத்தில் ஒரு தேதியைக் குறிப்பிட்டு அன்று என்னகிழமை என்று கேட்டால் அவர் ஒரு நொடியில் பதில் அளிப்பார். இதற்காக அவர் சொந்தமாய் ஒரு வழிகண்டு பிடித்திருக்கிறார். ஞாபகசக்தி, மனோதிடம், ஏகாக்ரசித்தம், பொறுமை இக்குணங்களிலிருந்தால் மனக்கணிதத்தில் சித்தியடையலாமென்று அவர் சொல்கிறார். கணக்குப் போடும் போது அவர் மௌனமாய் உட்கார்ந்து கொள்கிறார். அவரைச்சுற்றிப் பல ஜனங்கள் கூச்சல்போட்டாலும் அவர் கணக்குத்தவறுவதில்லை. அவ்வளவு மனச்சமாதியிருக்கக் கூடிய சக்தி அவரிடம் இருக்கிறது. அவர் கணக்குப் போடும்போது, அவர் மனக்கண்ணின் முன்பு காகிதத்தில் எழுதப்பட்டன போலவே எண்கள் வரிசை வரிசையாக நிற்குமாம்.

இங்கிலாந்தில் இவர் ஒவ்வொன்றிலும் 40 இலக்கங்களுள்ள இரண்டுபெரும் எண்களை 25 நிமிஷத்தில் மனதினால் பெருக்கிச் சொன்னார். அமெரிக்காவில் 60 இலக்கங்களுள்ள இரண்டு எண்களை 45 நிமிஷத்தில் பெருக்கிச் சொன்னார். பாரீஸ் நகரில் அவரைப் பின்வரும் கேள்வி கேட்கப்பட்டது:— 1878-ம் வருஷம் டிசம்பர்மாதம் 24-ந் தேதியிலிருந்து, 1924-ம் வருஷம் பிப்ரவரி 26உ காலை பத்துமணி வரையில் எத்தனை விநாடிகள்? இதற்கு விடை 27 விநாடியில் கூறினாராம்.

மேனாட்டில் பிரயாணம் செய்தபோது அவர் தினம் மூன்று சேர் பால்மட்டும் சாப்பிட்டுவந்தார். இதனால் அவர் தேகம் மெலிந்திருந்தாலும் மூளை தெளிவாக இருக்கிறது. பிரதிவாரமும் திங்கட்கிழமை யன்று அவர் காலஞ்சென்ற தமது மனைவியின் ஞாபகார்த்தமாக விரதம் இருக்கிறார். அன்று சாப்பிடுவதில்லை; தண்ணீர் குடிப்பதில்லை. தெய்வப்பிரார்த்தனையிலேயே காலங்கழிக்கிறார். மற்றதினங்களில் அவர் இரவு 11 மணி முதல் காலை 2 மணிவரையில் மூன்று மணிநேரம் மட்டும் தூங்குகிறார்.

# குறிப்பு

வரும் (16-10-25) வெள்ளிக்கிழமை தீபாவளி. அன்று நமது அச்சுக்கூடத்துக்கு ஓய்வு. அடுத்த "நவசக்தி" பரல் (23-10-25) வெள்ளிக்கிழமை வெளிவரும்.

மாற்றானுக்கிடங்கொடேல். ஏற்புகழ்ந்தி ... ஓடுபெறநில். நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம் நரகத்திலிடர்ப்படோம் நடலையில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்பமில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவாளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகினோமே.—(அப்பர்.)

சென்னை 1925ஆ அக்டோபர்மீ 9உ

## தீபாவளி

தீபாவளி என்று கொண்டாடுவது என்பதைப்பற்றி இருவித கருத்து உலவி வருதல் நேயர்கட்குத் தெரியும். நமது நாட்டில் ஏற்படும் கருத்து வேற்றுமைக்கும் பிளவுகட்கும் அளவில்லை. புரட்டாசி ... தீபாவளி கொண்டாட ... சொல்வோரும், ஐப்பசி ...ல் கொண்டாடவேண்டுமென்று புகல்வோரும் பேர்பெற்ற சோதிடரே யாவர்.

அவ்விருவர் வழி நிற்க மக்கள் ஒருப்படுவர் என்பது நிச்சயம். நாட்டில் சிலர் வரும் வெள்ளிக்கிழமையும், சிலர் பின்னும், சிலர் இருநாளும் நோற்பர். எந்நாளோ ஒருநாள் தீபாவளி நடைபெறல் வேண்டும். நாளைப் பற்றிய கவலை நமக்கில்லை.

சென்னையிலுள்ள பல தொழிற் சாலைகளில் ஓய்வு வரும்வெள்ளிக்கிழமை அளிக்கப்பட்டிருத்தல் கேட்டு,—நமது அச்சுக்கூடத் தொழிலாளர் விரும்பியவாறு—வரும் வெள்ளிக்கிழமை அவர்க்கு ஓய்வளிக்க நிச்சயித்தோம்.

தீபாவளி நாள் அவரவர் விரும்புமாறு கொள்ளக்கடவர். தீபாவளியன்று உயிர்க்கொலை நிகழாமலும், மதுபானமில்லாமலும், அந்நியத் துணி விலையாகாமலுமிருந்தால் போதும். நாட்டு நோன்புகளில் தலையாய தீபாவளியன்று ஆண்டவன் பெயரால் உயிர்க்கொலை புரிவதும், மதுபானஞ் செய்வதும், அந்நியத் துணி வாங்குவதும் இழிவு !! இழிவு !

போன நாட்களெல்லாம் போக. ... நாளில் ... உட்படுதல் பாவம்! பாவம்!! காந்தியடிகள் கொள்கைக்கு முற்றும் மாறுபட்ட மூன்றைத் தொலைக்க அன்று நாட்டார் விரதங்கொள்வாராக: தீபாவளி கொண்டாட்டத்தின் பயன் இதுவே.

## தீவிர ஒத்துழையாதார்க்கு ஒரு விண்ணப்பம்.

அதிகாரவர்க்க ஆட்சி முறைக் கீழ் வாழும் இந்தியர் ஒவ்வொருவர் உடலிலும் ஓடுங் குருதியில் ஒத்துழையாமை விரவியே ஓடுகிறது என்று உறுதியாகக் கூறலாம். அவ்வொத்துழையாமையைச் சிலர் வெளிப்படையாகப் புலப்படுத்துகிறார்; சிலர் அரைகுறையாகப் புலப்படுத்துகிறார்; சிலர் செயலிற் புலப்படுத்த அஞ்சுகிறார். ஒவ்வொருவரும் ஒத்துழையாமையில் பற்றுடையாரா யின் ஒத்துழைப்பு இடம்பெற்று நிற்றற்குக் காரணமென்னை என்று நேயர்கள் ஐயுறலாம். அவ்வொத்துழைப்பு மனமார்ந்த ஒத்துழைப்பன்று. வயிற்றின் கொடுமையும் அச்சமும் சிலரை ஒத்துழைக்கச் செய்கின்றன. இன்னொன்று சிலரை ஒத்துழைக்கத் தூண்டுகிறது. அஃதென்னை? அஃது ஒருவரை ஒருவர் நம்பாமை. இந்த நம்பிக்கையின்மைக்குக் காரணமாக நிற்பது சாதி வேற்றுமை. இச்சாதி வேற்றுமையால் எழும் வெகுளி அழுக்காறு முதலியன ஒத்துழைப்புக்கு உந்துகின்றன. வெகுளியால் அழுக்காற்றால் கொள்ளப்படுஞ் சந்நியாசம் போன்றது இவ்வொத்துழைப்பு. இந்தியாவில் பிறந்த எவரும் மனமார ஒத்துழைக்க ஒருப்படார் என்பது ஒருதலை. ஒவ்வோர் இந்தியர் உடலைக் கீறிப் பார்த்தால் ஒத்துழையாக் குருதி சொரிவது காணலாம்.

உள்ளத்தளவில் நிலவிக்கொண்டிருந்த ஒத்துழையாமை ஈராண்டு ஓர் இயக்கமாக உருக்காட்டி மறைவுற்றது. அவ்வியக்கம் மறைந்து நிற்கிறதன்றி அழியவில்லை என்பது கவனிக்கத்தக்கது. சுயராஜ்யம் அரும்பும் மட்டும் அவ்வியக்கம் அழிதல் அரிது.

ஒத்துழையாமை வெளிப்படையாக உருக்காட்டிய போது அதனில் நுழைந்து அதிதீவிரமாக உழைத்தவருள் பின்னைப் பிளவு ஏற்பட்டது. இக்கூட்டத்தார் பழைய ஒத்துழையாத்திட்டமே வேண்டும் என்று சொல்வோரும், மாறுதல்வேண்டுமென்று சொல்வோருமாகப் பிரிந்தனர். முன்னவர் மாறுதல்வேண்டாதாரென்றும் பின்னவர் மாறுதல் வேண்டுவோரென்றும் நாட்டவரால் அழைக்கப் பெற்றனர். முன்னவர் தீவிர ஒத்துழையாதாரென்றும், பின்னவர் சுயராஜ்யக் கட்சியினர் என்றுஞ் சொல்லப்பட்டனர். காந்தியடிகள் பின்னைச் சுயராஜ்யக் கட்சியார்க்கு எவ்வெவ் வழியில் விட்டுக் கொடுக்க வேண்டுமோ அவ்வவ் வழியில் விட்டுக் கொடுத்து வந்தார். இது போழ்து பாடலிபுரத்தில் காந்தியடிகள் காங்கரஸையே சுயராஜ்யக்கட்சியார் வயப்படுத்தவும் ஒருப்பட்டார். அவர் காங்கரஸுக்குள் இராட்டினச் சங்கம் ஒன்று கண்டு அதன் வாயிலாகக் கதர் தொண்டுசெய்ய நிச்சயித்து வேண்டும் வினையாற்றி வருகிறார்.

மாறுதல் வேண்டாத தீவிர ஒத்துழையாதார் சிலர்க்குப் பாடலிபுர முடிவு பிடிக்கவில்லை. அவர் உள்ளநிலை கண்டு மகாத்மாகாந்தி சென்ற வார "யங் இந்தியா"வில் ஒரு கட்டுரை எழுதினார். அதன்கண் அடிகள் தீவிர ஒத்துழையாதாருக்குச் சில நல்லுரை பகர்ந்துள்ளார். அவ்வுரை சென்றவார "நவசக்தி"யில் வெளியிடப்பட்டது. "பாடலிபுர முடிவுக்கிசையாத தீவிர ஒத்துழையாதார் காங்கரஸை விடுத்து விலகித் தம் மனச்சான்று வழி நின்று தங்கொள்கையை நாட்டார்க்கு அறிவுறுத்துவாராக" என்னுங் கருத்துப்பட அடிகள் அறைந்துள்ளார். இப்பொழுது தீவிர ஒத்துழையாதார் நிகழ்த்த வேண்டுவதென்னை என்பது கவனிக்கப்படல் வேண்டும். தீவிர ஒத்துழையாதார் அவரவர் மனச்சான்று வழி நடக்கலாம். அவர் காங்கரஸுக்குள்ளிருந்தே சுயராஜ்யக் கட்சியாரோடு போராடாமலும், அன்னார் முயற்சிக்குக் கேடு சூழாமலும் ராட்டினசங்கங்களை வளர்த்து வரலாம். இதற்கு உடன்படாத நண்பர்கள் மனச்சான்று வழி நடந்துகொள்ளலாம்.

நாட்டிலுள்ள எல்லாக் கட்சிக்கும் உயர்ந்ததும் உயிர் போன்றதுமா யிருப்பது தீவிர ஒத்துழையாக் கட்சியே யாகும். அக்கட்சிக்குள்ள செல்வாக்கு வேறு எக்கட்சிக்கு மில்லை. அக்கட்சியின் உழைப்பே இப்பொழுது சுயராஜ்யக் கட்சிக்கு வெற்றியளித்து வருகிறது. தீவிர ஒத்துழையாதார் தியாகம் முதலியவற்றைப்பற்றி நாம் விளம்பரஞ் செய்ய வேண்டுவதில்லை. அன்னார் தியாகம் பத்திரிகை ஆரவார உலகில் எழுதப்படாவிடினும், சத்திய உலகில் எழுதப்பட்டு வருகிறது. இப்பொழுது திடீரெனச் சட்ட மறுப்புப் போன்ற ஓர் இயக்கந் தோன்றினால் அத்தியாகிகளையே போர்முனையில் காணலாம். அக்கூட்டத்தாரை நாம் தொழுகிறோம். அவர்மாட்டு எமக்குள்ள அன்புக்கோரளவில்லை. அவர்களைவணங்கி இங்கே சிறுவிண்ணப்பஞ் செய்துகொள்கிறோம்.

தீவிர ஒத்துழையாதார்க்குத் தலைவர் மகாத்மாகாந்தி. அவர் எவ்வழிச்செல்கிறாரோ அவ்வழி நின்றுழைக்கவேண்டுவது தீவிர ஒத்துழையாதார் கடமை. "அந்தோ! காந்தியடிகள் எல்லாவற்றையும் விட்டுக் கொடுத்தாரே" என்று முனிவு கொள்ளலாகாது. காந்தியடிகள் எல்லார் நிலையையும் அளந்தே விட்டுக்கொடுக்கும் முறைகொண்டார் என்று நாம் கொள்வோம். காந்தியடிகளை மற்றவர் கைவிட்டதுபோலத் தீவிர ஒத்துழையாதாருங் கைவிடலாகாது. காந்தியடிகள் கடவுளிடத்தன்பும் உறுதியுமுடையாராகலான், அவர் நேர்மை வழியே நடப்பர். அவரது நேர்மை பயனளிக்க வேண்டிய காலத்தில் அளித்தே தீரும். வேண்டற்பாலது பொறுமையே.

தீவிர ஒத்துழையாதார்க்குப் பொறுமை அணிகலனாக இருக்கவேண்டுமன்றோ? பொறுமை கையாண்ட பிரகலாதன் முன் நரசிம்மம் தோன்றவில்லையோ? ஆதலால் தீவிர ஒத்துழையாதார் எக்காரணம் பற்றியுங் காந்தியடிகளுக்கு மாறுபட்டு நடவாதிருக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

"காங்கரஸ் நிலை என்னவது!" என்று நண்பர்கள் கடாவலாம். காங்கரஸ் அரசியல் பொறுப்பு சுயராஜ்யக் கட்சியார் தலைமீது சுமத்தப்பட்டிருக்கிறது. மற்ற அரசியல் கட்சிக்காரர் அவரோடிணங்கி நடப்பினும் நடக்க; பிணங்கி நடப்பினும் நடக்க; கண்ணபிரான் உறவினர் ஒருவரோடொருவர் பிணங்கிப் போரிட்டது போல் போரிட்டு மடியினும் மடிக. தீவிர ஒத்துழையாதார் காந்தியடிகள் சொல்வழி நின்று கடனாற்றுவாராக.

தீவிர ஒத்துழையாதார் காங்கரஸுக்குள்ளிருந்தோ வெளியிலிருந்தோ கதர்த் தொண்டிலும் சன்மார்க்கத் தொண்டிலுந் தலைப்பட்டு உழைத்து வருவாராக.

# இடியேறு

## குருகுலத்தில் சத்தியாக்கிரகம்

சேரமாதேவி குருகுலத்தைப்பற்றி மீண்டும் பத்திரிகைகளில் புகை எழும்புகிறது. இன்று எமக்குக் கிடைத்த ஒரு கடிதத்தால் சேரமாதேவி குருகுலத்தை உயிரென ஓம்பிவந்த பெரியார் சுத்தாநந்தபாரதியார் இரண்டாயிரம் ரூபா குருகுலத்தில் போட்டிருப்பதாகவும், அத்தொகை நியாயவரம்புக் கிளர்ச்சியில் வாராதொழியுமேல் அவர் உண்ணாவிரதங் கொள்ளப் போவதாகவும் தெரியப்பெற்றோம். அஃதுண்மையானால் குருகுல நிலைகுறித்து வருந்துகிறோம். ஸ்ரீ சுத்தாநந்த பாரதியார் நியாய மன்றமேற ஒருப்படாது சத்தியாக்கிரகஞ்செய்ய உன்னியிருப்பது போற்றத்தக்கது. ஸ்ரீ பாரதியார் உண்ணாவிரதங் கொள்ளுதற்கு முன்னர் அன்பிற்சிறந்த பெரியோர்கள் தலையிட்டு ஒரு நன்முடிவு செய்யுமாறு கேட்டுக்கொள்கிறோம். தெய்வமே என்று சத்தியாக்கிரகத்துறை நண்ணுவோர் குறைகளைதல் தெய்வ வடிவாகிய பொதுமக்கள் கடன் என்று நாம் விளங்க உரைக்க வேண்டுவதில்லை.

## சட்டசபைத் தலைவர்

சென்ற புதன்கிழமை சட்டசபை ...தில் நடைபெற்ற சட்டசபைத் தலைவர் தேர்...லில் பச்சையப்பன் கல்லூரித் தலைவர் ஸ்ரீமான் இரத்தினசாமி தெரிந்தெடுக்கப்பட்டார். இவருக்கு ஐம்பத்தொன்பது வாக்குகளும், இவரை எதிர்த்துநின்ற ஸ்ரீமான் இராமலிங்கச் செட்டியார்க்கு ஐம்பத்துநான்கு வாக்குகளுங் கிடைத்தன. போட்டியின்றிச் சட்டசபைத்தலைவர் தெரிந்தெடுக்கும் நல்லகாலம் இன்னும் பிறக்கவில்லை. இஃது இந்தியரின் நிலைமையைப் புலப்படுத்துகிறது. வெற்றிபெற்ற ஸ்ரீமான் இரத்தினசாமியவர்கள் கல்வி யிர்வைப்பற்றி நாம் சிறப்பித்துக் கூறவேண்டுவதில்லை. அவர் உலக சரித்திர ஆராய்ச்சியில் நிபுணர்; பலவாண்டு இங்கிலாந்திலிருந்தவர்; சட்டசபை அநுபவமுடையவர். அவர் எல்லாக் கட்சியாருடைய அன்பைப் பெறும்முறையில் தங்கடனாற்றுவாரென்று எதிர்பார்க்கிறோம். புதன்கிழமை நடைபெற்ற அத்தேர்தலில் செல்லாதவாக்கொன்று மிருந்தாம். அவ்வறிவு வாய்ந்தவரும் சட்டசபையில் அங்கம்பெற்றிருப்பது நாட்டின் அதிர்ஷ்டமே!

## கோயமுத்தூரில் பஞ்சம்

இந்திய ஊழியச் சங்கத்தின் சென்னைக் கிளையின் தலைவர் ஸ்ரீமான் வேங்கடசுப்பையா கோயமுத்தூர் ஜில்லாவில் பஞ்சம் பரவியிருக்கும் பிரதேசங்களைப் பார்வையிட்டு வந்து பத்திரிகைகளுக்கு ஒரு விரிவான அறிக்கை விடுத்துள்ளார். சென்ற மூன்று ஆண்டுகளாக மழையின்மையால் காங்கயம் என்னும் ஊருக்குச் சுற்றுப்புறத்தில் கிணறுகளெல்லாம் வறண்டுபோயினவென்றும், ஜனங்கள் குடி தண்ணீருங் கிடைக்கப் பெறாது வருந்துகிறார்களென்றும், கால்நடைகள் தீவனமில்லாமல் தவிக்கின்றனவென்றும் அவர் தெரிவிக்கிறார். அரசாங்கத்தார் பஞ்ச நிவாரண வேலை செய்ய முன்வரும் வரையில் காத்திராமல் பொது ஜனங்கள் உதவி செய்ய வேண்டுமென்று அவர் கேட்டுக்கொள்வதை அனைவரும் ஆதரிப்பார்கள். முதன் முதலில் அங்கு இப்போது உடனே செய்ய வேண்டிய வேலை வறண்டுபோன ஆதிதிராவிடர் கிணறுகளை ஆழமாகத் தோண்டிக் கொடுப்பதாகும். முந்நூறு கிணறுகள் இவ்வாறு தோண்ட வேண்டியதாயிருக்குமென்றும், இதற்கு ரூபா பதினையாயிரம் செலவாகுமென்றும் அவர் கூறுகிறார். அடுத்தபடியாகக் கஞ்சித் தொட்டிகள் ஆங்காங்கு ஏற்படுத்த வேண்டுமென்பதும் அவருடைய யோசனை. இந்த உத்தமமான தர்மத்துக்கு வேண்டிய எல்லா உதவியும் செய்வது பொது ஜனங்களின் கடமை என்று நாம் சொல்லவேண்டுவதில்லை.

## ஒரு சந்தேகம்

ஆனால் மேற்சொன்ன அறிக்கையைப் படித்தபோது எமது மனதில் ஒருசந்தேகம் எழுந்தது. அதை இங்குக் குறிப்பிடுதல் எமது கடமையெனக் கருதுகிறோம். காங்கயத்தைச் சுற்றியுள்ள கிராமங்களில் எத்தனையோ பெண்மணிகள் இராட்டை சுழற்றிப் பிழைத்துவருகிறார்கள். இந்தப் பஞ்சகாலத்தில் கோயமுத்தூர் ஜில்லாவில் ஆயிரக்கணக்கான ஜனங்களுக்கு இராட்டினம் உணவளித்து வருகிறதென்பதை நாம் அறிவோம். ஸ்ரீமான் வேங்கடசுப்பையா தமது நீண்ட அறிக்கையில் இதைப்பற்றி ஒரு வார்த்தையும் கூறினாரில்லை. அன்னார் கிராமங்களின் நிலைமையை நன்கு ஆராய்ந்து பார்க்கவில்லையா? அல்லது பஞ்ச நிவாரணத்திற்கு இராட்டையைச் சாதனமாகக் கொள்ளுதல் தமது சங்கத்தின் நோக்கங்களுக்கு விரோதமாயிருக்குமென்ற கருத்துக்கொண்டு வேண்டுமென்றே விட்டுவிட்டாராவென அறிய விரும்புகிறோம். இன்னும் இராட்டைப் பெருக்கிற்கு உழைப்பது பஞ்சம் போக்குவதாகும்.

## இராட்டினத்துக்கு ஆதரவு

பூனை தன்னுடைய கண்ணை மூடிக்கொண்டு உலகமே அஸ்தமித்து விட்டதாக நினைத்துக்கொள்ளும் என்று சொல்வார்கள். கதர் இயக்கம் சம்பந்தமாக நமது சகோதரர் சிலருடைய செயல் இதைப்போலவே யிருக்கின்றது. ஆயினும் கதருக்கு நாளுக்கு நாள் ஆதரவு பெருகி வருகிறதென்பதில் ஐயமில்லை. சமீபத்தில் நாம் எதிர் பாராத இடத்திலிருந்து இராட்டினத்துக்கு ஆதரவு கிடைத்திருக்கிறது. மிஸ்டர் ஜே. எம். ஹென்ஸ்மான் என்பவர் கும்பகோணம் அரசாங்கக் கல்லூரியின் தலைமை ஆசிரியராயிருந்தவர். இவர் தற்போது யாழ்ப்பாணத்தில் வசித்து வருகிறார். ...ஞாயிற்றுக்கிழமை நடந்த கும்ப...ணம் பழைய மாணவர் சங்கத்தின் ஆண்டு விழாவுக்கு அவர் கீழ்க்கண்ட செய்தி அனுப்பியுள்ளார் :—

"தற்போதுள்ளன போன்ற சர்வகலாசாலைகளைப் பெருக்கிக்கொண்டே போவதில் பயனில்லை. இக்கலாசாலைகளில் படித்துப் பட்டம் பெற்றவர் எத்தனையோ பேர் பிழைப்புக்கு வகையின்றித் திகைக்கின்றனர். நாட்டின் பொருளாதார முன்னேற்றத்துக்கான தொழிற்கல்வி அமைப்புகளே தற்போது தேவை. இலக்கியக் கல்விமட்டும் அளிக்கும் கலாசாலைகள் வேண்டா. இந்தியாவின் உண்மை நோய் இன்னதென்று உணர்ந்தவர் காந்தி ஒருவரே. இதுகால அவருடைய நூற்றல் இயக்கமும், கதருமே நாட்டுக்கு ஏற்ற திட்டங்கள். ஆனால் அவர் ஐம்பது ஆண்டுகளுக்குப் பின்னர் தோன்றியிருக்கவேண்டும்."

## தற்காலக்கல்வியும் தற்கொலையும்

மகாத்மா காந்தியினிடம் குருட்டுபக்தி கொண்டவர்குழாத்தில்மிஸ்டர் ஹென்ஸ்மானையும் சேர்த்துவிட நமது நாகரிகச் செல்வர்கள் துணியார்களென நம்புகிறோம். நடுநிலைபிறழாமல் நின்று நோக்குவார் அனைவரும் கதர் விஷயத்தில் மிஸ்டர் ஹென்ஸ்மானைப்போலவே அபிப்பிராயங் கூறுவர். தற்காலக் கல்விமுறையின் பயனற்ற தன்மையைப்பற்றி அன்னார் கூறுவதையும் நேயர்கள் கவனித்தல்வேண்டும். ஓர் உயர்தர கலாசாலையின் தலைவராக இருந்தவர் இவ்விஷயத்தில் அபிப்பிராயங் கூறப் பெரிதும் தகுதியுடையவர். இவர் கூற்றுக்கு உதாரணமாய் ஒரு துக்ககரமான சம்பவத்தைக் குறிப்பிட விரும்புகிறோம். திருவல்லிக்கேணியிலுள்ள மாணவர் விடுதியொன்றில் வசித்த பி. ஏ. வகுப்பு மாணக்கர் ஒருவர் சென்றசனிக்கிழமை இரவு தற்கொலை செய்துகொண்டு மாண்டனராம். ஜகந்நாத ஐயங்கார் என்ற பெயர் கொண்ட இவர் இராசாயன சாஸ்திர மாணக்கர், ரூபா ஐந்நூறுக்கு மேல் அவருக்கு அவசரமாகப் பணந்தேவையாயிருந்ததென்றும், அவர் நம்முடைய மாமனுக்கும், சகோதரனுக்கும் கடிதம் எழுதியும் பணம் வராததால், இராசாயன ஆராய்ச்சி சாலையிலிருந்து சிறிது விஷத்திராவகம் கொண்டுவந்து இரவில்அதை உண்மோண்டார் என்றும் தெரியவந்தன. அந்தோ! இவர் இத்தனை காலம் இராசாயனசாஸ்திரம்படித்தது நஞ்சு உண்டு தற்கொலை புரிந்து கொள்வதற்கே பயன்பட்டதானல், தற்காலக் கல்வி முறையின் சிறப்பை என்னவென்று கூறுவது? ஸ்ரீமான் ஜகந்நாதனுடைய ஆத்மா சாந்தியுறுவதாக.

## தாழ்மைக்கோரிலக்கியம்

பம்பாய் நகரில் காந்தியடிகளின் பிறந்தநாள் கொண்டாடப்பெற்ற போது ஸ்ரீமான் யமுனாதாஸ் துவாரகாதாஸ் அடிகளின் பெருமையை விளக்கும் பொருட்டு ஒரு நிகழ்ச்சியை எடுத்துக்கூறினர். 1921-ம் ஆண்டிறுதியில் ஒத்துழையாமை இயக்கம் உச்சநிலையில் இருந்தபோது 'வட்டமேஜை மகாநாடு' கூட்டவேசைப்பற்றிய பேச்சு நடந்தது நேயர்களுக்கு நினைவிருக்கும். அப்போது ஸ்ரீமான் யமுனாதாஸ் ஒத்துழையாமையின் தீவிர விரோதிகளில் ஒருவராய் விளங்கினர். மற்ற கட்சித் தலைவர்கள் சிலர் மேற்படி மகாநாட்டைப்பற்றி யோசிப்பதற்காக அவரை மகாத்மாவினிடம் அனுப்பினர்களாம். ஸ்ரீமான் யமுனாதாஸ் சபர்மதியில் மகாத்மாவின் விருந்தினராக இருந்தார். அங்கு அவர் வழக்கம்போல் ஸ்நானம் செய்துவிட்டு உடைகளைச் சுத்தம் செய்யாமல் விட்டுவிட்டார். மறுநாட்காலையில் எழுந்து பார்க்கும்போது மகாத்மா காந்தி அந்த உடைகளைத் துவைத்துப் பிழிந்து உலர்த்துவதைக் கண்டார். இதைக்குறித்து ... பெரிதும் வருந்தி மகாத்மாவிடம் ...யிட்டபோது அடிகள் யமுனாதாஸின் ...யைத் துவைத்து தமக்கு மிகுந்த ...தந்ததென்றும், அவர் ஒத்துழை...க்கத்தை எதிர்த்தபோதிலும் அவ...டை சுதேசி ஆடையாயிருப்பது ...சந்தோஷமடைவதாகவும் கூறினர் ...ன்றேதாழ்மை? அகில இந்தியகாங்...கூட்டத்தில் "உம்மைத் திரணமாக ...கிறேன்" என்று உரையாடிய சுயராஜ்...கட்சித் தலைவரும், மற்ற அரசியல் தலைவர்களும் மேற்போந்த அரிய நிகழ்ச்சியை ...ன்றிக் கவனித்தல் நலம்,

## ரிப்பியரின் சுதந்திரப்போர்

மொரோக்கோ நாட்டில் வீரர்அப்துல்கரீமின் தலைமையில் ரிப்பியர் நடத்தும் சுதந்திரப் போராட்டம் நேயர்கட்குத் தெரியும். சென்ற வாரத்தில் பிரஞ்சுக்காரரும் ஸ்பானியரும் சிற்சில விடங்களில் வெற்றி பெற்றதாகச் செய்திகள் கிடைத்திருக்கின்றன. இச்செய்திகள் எமக்கு வருத்தத்தைத் தந்தனவென்று சொல்ல வேண்டுவதில்லை. இந்த யுத்தத்தில் நமது அநுதாபம் ரிப்பியர் பக்கலிலேயே இருக்குமென்பதிலும் ஐயமில்லை. இதற்குக் காரணம் ஒன்றே போதும். யுத்தம் பிரான்சில் அல்லது ஸ்பெயினில் நடைபெறவில்லை. ரிப்பியரின் தாய்நாடாகிய மொரோக்காவில் தான் நடக்கிறது. இதிலிருந்தே ரிப்பியர் தாங்கள் தாய்நாட்டின் விடுதலைக்காகப் போராடுகிறார்களென்றும், ஸ்பானியரும், பிரஞ்சுக்காரரும் மண்ணாசை கொண்டு சண்டை யிடுகிறார்களென்றும் விளங்குகின்றன. மொரோக்கோவில் துருப்புகள் தற்கால நாகரிக சாதனங்களையெல்லாம் கொண்டு கொலை புரிந்து வருகையில், சர்வதேசச்சங்கத்தார் வாளாயிருந்து வருகின்றனர். மகாயுத்தம் முடிந்தபின்னர் இச்சர்வதேச சங்கம் ஸ்தாபிக்கப்பட்டபோது இனி உலகில்நித்திய சமாதானம் நின்று நிலவுமென்று சொல்லப்பட்டது. ஆயினும் இந்த மொரோக்கோ யுத்தத்தை நிறுத்தும் பொருட்டு இதுவரை சர்வதேசச்சங்கத்தார் ஒரு சிறு விரலையும் அசைத்தாரில்லை. சர்வதேச சங்கம் என்று கூறுவதைவிட "மேனாட்டு வல்லரசுகளின் சங்கம்" என்று இதை அழைப்பது சாலப்பொருத்தமுடைய தாகுமன்றே?

## "மண்ணெண்ணெய்—எச்சரிக்கை!"

மண், பெண், பொன்னாசைகள் என்று நமது பெரியோர் மூன்றுவகை ஆசைகளை வகுத்தனர். ஆனால் இதுகால உலகில் மண்ணெண்ணெய் ஆசைமூவாசைகளுக்கும் முதன்மையாய் விளங்கிவருகிறது. வருங்காலத்தில் மண்ணெண்ணெய் ஆசை காரணமாய் மகா யுத்தங்கள் ஏற்படுமென்று அறிஞர் பலர் கருதுகின்றனர். இவர்கள் கூற்றை மெய்ப்படுத்துமாறுபோல் மண்ணெண்ணெய் ஊற்றுக்கள்நிறைந்த மோசூல் பிரதேசம் இப்போது புகைய ஆரம்பித்திருக்கிறது. மோசூல் சம்பந்தமாகத் துருக்கிக்கும் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கும் நடந்துவரும் விவாதத்தைப்பற்றி நேயர்கள் அறிவார்கள். அங்கோரா அரசாங்கத்தார் இராணுவ உத்தியோகஸ்தர்களை வைத்திய பரிசோதனை செய்துகொள்ள அழைத்திருக்கிறார்கள் என்னும் செய்தி பெருங்கலக்கத்துக்கு இடந்தந்திருக்கிறது. "யுத்தம் நடவாது" என்று பிரிட்டிஷ் மந்திரி உறுதிகூறுகிறார். ஆயினும் மண்ணெண்ணெய் மிகஅபாயகரமான பொருள் என்றுசொல்ல வேண்டுவதில்லை. கவலையீனத்தால் ஒருசிறு தீக்குச்சியைக் கிழித்துப் போட்டுவிட்டால் போதும். பெருந் தீ உண்டாகிவிடும். ஆதலின் "மண்ணெண்ணெய்! ஜாக்கிரதை!" என்று இருசாராருக்கும் இதுபோழ்து எச்சரிக்கை செய்தல் நன்றாகும்.

## மேனாட்டாரின் பரோபகார சிந்தை

மேனாட்டாரின் பரோபகார குணத்தையும், தன்னலமறுப்பையும் என்னவென்று புகழ்ந்துரைப்பது? "பரோபகாரம் இதம் சரீரம்" என்ற செம்மொழிக்கு இலக்கியமாய் விளங்குபவர் அவரே. "தனக்கென வாழாப்பிறர்க்குரியாளர்" என்றால் இதுகால அவர்களையே சொல்லவேண்டும்! உலகிலுள்ள மற்றைத் தேசத்தினர் அநாகரிகச் சேற்றில் இன்னுங் கிடந்து உழன்று வருவது கண்டு அவர்கள் அல்லும் பகலும் கண்ணீர் உகுக்கின்றனர். இரவு பகல் அவர்களுடைய சிந்தையில் குடிகொண்டிருப்பது நம்போன்றவரின் முன்னேற்றமேயாகும். இந்நோக்கம் நிறைவேறும் பொருட்டு எத்தகைய தியாகம் செய்ய வேண்டிவரினும் அவர்கள் பின் வாங்குவதில்லை. ஆனால் இந்த மனித சாதியின் நன்றி கெட்ட தன்மை தான் என்னே? எவர்களுடைய நன்மைக்காக மேனாட்டார் இத்துணை பாடுபடுகின்றனரோ அவர்களுக்கு இவர் செய்வது தீமையாகத் தோன்றுகிறது!

## சில உதாரணங்கள்

அப்பரோபகாரத்துக்குச் சில உதாரணங்கள் காட்டுவோம். ஆப்பிரிக்கா கண்டத்திலுள்ள ஸூடான்நாட்டில் பருத்தி சாகுபடிக்கேற்ற பிரதேசங்கள் இருக்கின்றன. பருத்தி உலகின் நாகரிக அபிவிருத்திக்கு இன்றியமையாத பொருள் உணவுக்கு அடுத்தாற்போல் மனிதர்க்கு அவசியமான பொருள் உடையேயன்றோ? பருத்தியை உடையாக்கித் தருவதற்கோ மான்செஸ்டரில் ஆலை முதலாளிகள் சித்தமாயிருக்கின்றனர். ஆகவே ஸூடான் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்குட்பட்டிருந்தால் அங்குப் பருத்தி விளைவித்து மான்செஸ்டரில் துணியாக்கி உலகத்திற்களிக்கச்சௌகரியமாயிருக்கும். இத்தகைய நன்னோக்கத்துக்குக் குறுக்கேவரும் எகிப்திய தேசிய வாதிகளின் செயலை எவ்வாறு பொறுத்துக்கொண்டிருப்பது? இவ்வாறே மோசூல் பிரதேசத்தில் தற்கால நாகரிக வாழ்க்கைக்கே அடித்தளம் போன்ற மண்ணெண்ணெய் ஊற்றுக்கள் இருக்கின்றன. இந்த அரிய பொருள் உலகத்திற்கு உபயோகப் படாவண்ணம் துருக்கியர் குறுக்கே நிற்கின்றனர். பரோபகாரசிந்தையில், பிரஞ்சுக்காரரும், ஸ்பானியர்களும் பிரிட்டிஷாருக்குப் பின்வாங்குவார்களா? மொரோக்காவிலுள்ள இரும்புச்சுரங்கங்களை உலக முன்னேற்றத்துக்குப் பயன் படுத்தும் உயர்ந்த நோக்கத்துக்காக இவர்கள் இதுகால பாடுபடுகிறார்கள்.

## இராஜதந்திரமும் நாகரிகமும்

மேனாட்டு இராஜதந்திரிகள் மேற்கண்டவாறு வாதிக்கின்றனர். அகராதியில் 'இராஜதந்திரம்' என்ற வார்த்தைக்குக் கபடம், வேஷம், அக்கிரமம் என்ற பொருள்களைச் சேர்த்துக் கொள்ளவேண்டுமென நாம் சிபார்சு செய்கிறோம். உலகில் நாகரிகத்தைக் காப்பதற்கே தாங்கள் அவதரித்திருப்பதாகமேனாட்டார்பறையறைகின்றனர். "இத்தகைய நாகரிகத்திலிருந்து எம்மைக் காப்பாற்றுவாய்!" என நாம் இறைவனை நோக்கித் தொழுகின்றோம். ரிப்பியர்களும், ஸூடான் தேசத்தினரும், மோசூல் வாசிகளும் இவ்வாறுதான் பிரார்த்திக்கின்றனர்.

## கவியரசியின் வேண்டுகோள்

நமது கவியரசிசரோஜனி தேவியார் இம்மாதம் பதினோராந் தேதி ஞாயிற்றுக்கிழமை, இந்தியமக்கள் அனைவரும், தென்னாப்பிரிக்காவில் இந்தியர்க்கு நேர்ந்துவருந்துன்பங் குறித்து, கூட்டங் கூடியும், ஆண்டவனை வழுத்தியும் ஒற்றுமை காட்டவேண்டுமென்று கேட்கிறார். ஐரோப்பியர் உள்ளிட்ட அனைவரையும் அம்மையார் வேண்டியிருப்பது கவனிக்கத்தக்கது. தென்னாப்பிரிக்காவில் நம்மவர்கள் உரிமையைக் கெடுக்க அங்குள்ள அரசாங்கம் நீண்ட காலமாக முயன்று வருவது உலகறிந்ததொன்று. அவர்கள் குறைபோக்க இந்தியர் அனைவரும் ஒன்றுபட்டு முறையிடும் வேண்டுதல் வீண்போகாது. அதிகாரவர்க்கத் துணையையும், இங்கிலாந்து உதவியையும் மனங்கொண்டு ஆண்டவனை வழுத்தாதிருக்குமாறு நேயர்களைக் கேட்டுக்கொள்கிறோம். திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை என்று உறுதியோடு ஆண்டவனைப் போற்றவேண்டுமென்பது எமது விருப்பம்.

## நற்செய்தி

இந்தியா, பர்மா, இலங்கை இம்மூன்று நாடுகளுக்கும் பொதுவான தேசிய கிறிஸ்துவர் சங்கம் ஒன்று இருக்கிறது. இதன் தலைவர் அகில இந்தியாவிலுமுள்ள புராடஸ்டண்டு கிறிஸ்துவர்களின் தலைமைக்குருவான கல்கத்தா பிஷப் ஆவர். இவரும், இன்னும் இச்சங்கத்தின் உபதலைவர், காரியதரிசிகளும் கையொப்பமிட்டு, வரும்11-ந்தேதிதென்னாப்பிரிக்கா இந்தியர்களின் துயரம்நீங்கும்பொருட்டுத் தேசமகாஜனங்களுடன் சேர்ந்து கிறிஸ்துவ சமூகத்தினரும் பிரார்த்தனை செய்யவேண்டுமென்று ஓர் அறிக்கை விடுத்திருக்கின்றனர். தற்போது ஆலோசனையிலுள்ள "ஆசியர் மசோதா" நிறைவேறினால் இந்தியர்க்குப் பெரிதும் அநீதி இழைத்ததாகும் என்றும் அவர்கள் குறிப்பிட்டிருக்கின்றனர். உண்மையில்இஃதோர் நற்செய்தியேயாகும். ஐரோப்பியரும், மற்றவர்களும் சம்பந்தப்பட்ட விஷயங்களில் கிறிஸ்துவர்களிடமிருந்து கிறிஸ்துவச் செயல்களை எதிர்பார்ப்பது இக்காலத்தில் மிக அருமை. ஆகவே தேசிய கிறிஸ்துவச் சங்கத்தின் இவ்வறிக்கை எமக்குப் பெருமகிழ்ச்சியைத் தந்திருக்கிறது.

## தன் வயிறு நிறைந்தால்

இம்மை வினைப்பயன்களை இம்மையிலேயே அநுபவித்தல் சிலருக்கே வாய்ப்பதுண்டு. இச்சிலரில் ஸர் நரசிம்மேசுவர சர்மா ஒருவர். அமிருதசரஸ்காங்கிரஸ்வரை இவர்காங்கிரஸ் சுடர் மணிகளில் ஒருவராயிருந்து வந்தார். அந்த மகாசபையில் ஆயிரக்கணக்கான பிரதிநிதிகள் குழுமியிருக்கையில் பஞ்சாப் கொடுமைகளுக்குப் பொறுப்பாளியான செம்ஸ்போர்டு பிரபுவை ஆதரித்துப் பேசியவர் இவர் ஒருவரேயாவர். கைமேல் பலன் இவருக்குக் கிட்டிற்று! அடுத்த ஆண்டில் இந்திய அரசாங்கத்தின் நிர்வாக சபை அங்கத்தினராக நியமனம் பெற்றார். அமிருதசரஸ் மகாசபையில் தனித்து நின்று போராடி செம்ஸ்போர்ட்டு பிரபுவின் புகழைக்காத்த அசகாய வீரத்தை மெச்சி இவருக்கு 'வீரர்' (Knight) என்ற பட்டமும் விரைவில் வழங்கப்பட்டது. இத்தகைய தேசபக்த மணி அண்மையில் தமது பதவியினின்றும் விலகப்போகிறது. இதை முன்னிட்டு இவருக்கு இராஜப்பிரதிநிதியின் மாளிகையில் ஒரு பெரும் விருந்து நடத்தப்பட்டது. அப்போது இராஜப்பிரதிநிதியும், அவருடைய தோழர் சர்மாவும் ஒருவரையொருவர் வாய்கொண்ட மட்டும் புகழ்ந்து அலங்கரித்துக்கொண்டனர். இவர்கள் விருந்துண்டு களிப்பதிலாவது, பரஸ்பரப் புகழ்ச்சி கூறிக்கொள்வதிலாவது எமக்கு எள்ளளவும் அசூயையில்லை ஆனால், தங்கள் வயிறு நிறைந்தால் தேசமக்கள் அனைவருடைய பசியும் தீர்ந்து விட்டதாக இந்த 'மேதாவி'கள் எண்ணிக்கொள்வது எமக்கு வியப்பையளிக்கிறது.

## வளமா?

துர்வாச மகரிஷியின் சாபத்திலிருந்து பாண்டவர்களைக் காப்பதற்காகக் கண்ணன் ஒருமுறை துரோபதையின் அக்ஷய பாத்திரத்திலிருந்து ஒரு பருக்கையை உட்கொள்ள உலகிலுள்ள சேதன அசேதனப்பொருள்களெல்லாம் வயிறு நிறையப் பெற்றன வென்ற பாரதக் கதையை நேயர்கள் அறிந்திருப்பார். ஸர் நரசிம்மேசுவர சர்மா தம்மைக் கண்ணனாகவே நினைத்துக்கொண்டார்போலும்! இராஜப்பிரதிநிதி தம்மைப்பற்றிப் பேசிய பின்னர், ஸர் சர்மா உணர்ச்சி மேலீட்டால் வாய்குழற, நாத்தழதழக்க நிகழ்த்திய சொற்பொழிவில். ரெடிங் பிரபுவின் உத்தியோக காலத்தில் மாதமும்மாரி பொழிந்து நாடு செழித்ததென்றும், தேசமெங்கும் வளங்கொழித்துத்தாண்டவமாடுகிறதென்றும் சொல்லியுள்ளார். செவ்வாய்க்கிழமை யிரவு சிம்லா இந்தியர்கள் இராஜப்பிரதிநிதிக்கு அளித்த விருந்தின்போது பேசிய ஸர் முகமது ஷாபியும் இவ்வாறே இந்தியா எல்லாத் துறைகளிலும் முன்னேறிவிட்டதாகச் சொல்கிறார். உண்மையே. சிம்லா மலையுச்சியிலுள்ள தேவர்கள் கீழே பூமியிலுள்ள மானுடர்களின் நிலைமையை எவ்வாறறிவர்? ஏழை இந்தியர்களின் பசிக் கொடுமையை உள்ளபடி அறிந்துகொள்ளவேண்டுமாயின் காந்தியடிகளிடமன்றோ செல்ல வேண்டும்?

## தெருக்கூத்து.

நமது தமிழ்நாட்டில் சிறிதுகாலத்திற்கு முன் வரையில் "தெருக்கூத்து" என்று சொல்லப்படும் நாடகங்கள் நடைபெற்றுவந்தன. இன்னும் கிராமாந்தரங்களில் ஒவ்வோரிடத்தில் இத்தகைய கூத்துக்கள் நடைபெறுகின்றன. ஆனால் இதுகால எல்லா நாடகங்களுக்குமே "டிராமா" என்னும் நாகரிகமான பெயர் கொடுத்து வருகிறார்கள். நிற்க, மேற்சொன்ன தெருக்கூத்துகளில் அரசன் மேடையில் வந்து கொலுவில் அமர்ந்ததும் "மந்திரி! நமது இராஜ்யம் சுபிட்சமாயிருக்கின்றதா?" எனக் கேட்பான். உடனே மந்திரிமார் ஒவ்வொருவராக எழுந்து "அரசே! வேதியர்கள் வேதம் ஓதுகின்றனர். வைசியர் வர்த்தகம் செய்கின்றனர். பசுக்கள் சுகமாயிருக்கின்றன. மாதமும்மாரி பெய்கின்றது. நாடு செழித்து ஓங்குகின்றது" என்று வரிசையாகப் பாடம் ஒப்புவிப்பார்கள். சர்மா, ஷாபி இவர்களுடைய பேச்சுக்களைப் படித்தபோது எமக்கு இக்காட்சி நினைவிற்கு வந்தது.

## வக்கீல்களும் அரசியலும்

கும்பகோணம் வக்கீல் சங்கத்தாரின் ஆண்டு நிறை கூட்டத்தில் சொற்பொழிவு நிகழ்த்திய பேர்பெற்ற வக்கீல் ஒருவர், வக்கீல் தொழிலை மேற்கொண்ட இளைஞர் தங்கள் தொழிலில் வெற்றியடைந்து முன்னுக்கு வரவேண்டுமாயின் அரசியலில் தலையிடாது ஒதுங்கி நிற்க வேண்டுமென்ற புத்திமதி கூறியுள்ளார். அரசியல் கிளர்ச்சியில் ஈடுபடுதல் வக்கீல் தொழிலில் பிரபலமடைவதற்குச் சாதனமாயிருந்த காலம் ஒன்று இருந்ததென்பதை நேயர்களுக்கு நினைவூட்டுகிறோம். அக்காலத்தில் அரசியல், ஒழிந்த நேரத் 'தமாஷா'வாக இருந்தது. காந்தியடிகள் இந்நாட்டு அரசியலில் தலையிட்டதே இப்போது தோன்றியுள்ள மாறுதலுக்குக் காரணம் என்று நாம் கூறவேண்டுவதில்லை.

## பர்மாவில் கண்டனம்

தண்டனைக்குட்பட்ட இந்திய குற்றவாளிகளைப் பர்மாவினின்றுந் துரத்த வேண்டுமெனுங் கருத்தோடு பர்மா சட்டசபையில் நிறைவேற்றப்பட்ட மசோதாவைப்பற்றி முன்னர் நாம் எழுதியது நேயர்கட்கு நினைவிருக்கலாம். அம்மசோதாவை மறக்கப் பர்மியரே புகுந்திருப்பது கவனிக்கத்தக்கது. சென்ற ஞாயிற்றுக்கிழமை ரங்கூனில் பெரிதும்பர்மியர் சேர்ந்த கூட்டமொன்றுகூடி அம்மசோதாவை மறுத்து இராஜப்பிரதிநிதி அதற்குச் சம்மதமளித்தலாகாது என்னுந் தீர்மானம் நிறைவேற்றியது. அக்கூட்டத்தில் தலைமை வகித்த இந்திய சட்டசபை அங்கத்தவர் ஸ்ரீமான் டோக்கியு, இந்திய குற்றவாளிகளைத் தேசப்பிரஷ்டஞ் செய்வது மசோதாவின் நோக்கமென்று சொல்லப்பட்டாலும், இந்திய அரசியல் கிளர்ச்சிக்காரரை ஓட்டுதல் என்பதே அதன் உள்ளக்கிடக்கை என்று குறிப்பிட்டுச் சட்டசபையில் அம்மசோதாவிற்கு ஆதரவளித்த பர்மிய தேசீய 'வாதி'களையுங் கண்டித்தார். அம்மசோதா பர்மியர் கூட்டத்தில் பர்மாகாரரால் கண்டிக்கப்பட்டதை இராஜப்பிரதிநிதி உணர்ந்து நடப்பரோ?

இந்திய ரயில்வே மகாநாடு நேற்று சிம்லாவில் கூடியிருக்கும். அது 10 நாள் வரை நடைபெறலாம்.

* * *

ஆமெத் நகரைச்சேர்ந்த பிரபல மிதவாதியாகிய ராவ்பகதூர் சிதாலே என்பவர் சுயராஜ்யக் கட்சியிற் சேர்ந்துவிட்டார்.

* * *

நான்கு வங்காளிகள் ஒரு கோடீசுரரை ஏமாற்றி 7000 ரூபா அபகரித்ததாகக் கல்கத்தாவில் கைது செய்யப்பட்டார்கள்.

* * *

மாத்தளைக் கணித்தாயுள்ள கிராமத்தில் கொல்லப்பட்ட ஒரு மான் போட்டி காரணமாக 637-8-0 ரூபாய்க்கு விற்கப்பட்டதாம்.

* * *

மைசூர் ஜனப் பிரதிநிதி சபையில் பசுக்கொலையைத் தடுக்க வேண்டுமென்ற தீர்மானம் ஏகோபித்து நிறைவேற்றப்பட்டது.

* * *

ஐதராபாத் நகரசபையார் விரும்பு மிடத்தில் மட்டும் மதுக்கடைகளை வைக்க அதிகாரமிருக்க வேண்டுமென அரசாங்கத்தைக் கேட்டிருக்கின்றனர்.

* * *

ஐம்பது ருஷியர்களையும் ஆயுதங்களையும் மண்ணெண்ணெயையும் ஏற்றிக்கொண்டு வந்த ருஷியப் போல்ஷ்விக் கப்பல் ஹாங்காங்கில் தடுக்கப்பட்டது.

* * *

இந்தியா சட்ட சபைத்தலைவர் ஸ்ரீமான் வி.ஜே.படேல், பம்பாய் நகரசபையில் வகித்து வரும் அங்கத்தவர் பதவியினின்றும் விலகப் போவதில்லையாம்.

* * *

அதிகமழை காரணமாகக் கொழும்பில் ஒரு பாகத்தில் இருப்புப்பாதைமீது நிலச்சரிவு உண்டானது. பல பாகங்கள் வெள்ளத்தில் மூழ்கி யிருக்கின்றன.

* * *

பிரிட்டனில் இறக்குமதியாகும் ஜெர்மன் சாமானுக்கு லைசென்சு பெறவேண்டுமென்ற நிபந்தனை யிருந்தது. அது இம்மாதம் முதல் தேதியோடு நீக்கப்பட்டதாம்.

* * *

மௌலானா ஷவுகத்அலியின் தலைமையில் ஐக்ய மாகாண இராஜீய மகாநாடு இம் மாதம் 18-ந் தேதி அலகாபாத்தில் கூடும். மகாநாட்டில் காந்தியடிகளும் வீற்றிருப்பாராம்.

* * *

[illegible] க்கத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைப் புரிந்து வருகிறது. 22 வயதுக்கு மேற்பட்டவர் இராணுவத்தில் சேரவேண்டுமென்ற ஆணை பிறப்பித்திருக்கிறதாம்.

* * *

இந்து மகா சபையின் விசேடக் கூட்டம் நவம்பர் 2-ம்வாரத்தில் பம்பாயில் கூடும். லாலாலஜபதிராயிக்கு தேகசுகம் இடந்தராவிட்டால் பண்டித மாளவியா தலைமை ஏற்பார்.

* * *

காந்தியடிகள் பிறப்பு நாள் கராச்சியில் மிக சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. தாழ்ந்த வகுப்பு மாணவர்கள் பதினாயிரம் பேருக்கு நல் விருந்தளிக்கப்பட்டது போற்றற்குரியது.

* * *

அக்டோபர் முதல்தேதியோடு 78 வயது நிரம்பப்பெற்ற பிரம்மஞான சங்கத்தலைவர் அன்னிபெசண்டம்மையார் பிறந்தினம் சென்னையிலும் வேறு பல விடங்களிலும் கொண்டாடப்பட்டது.

* * *

பாய் பேரு கொலை சம்பந்தமாகப் போலீசார் செய்த விசாரணையின் பயனாகப் பிணம் அகப்பட்டதாம். பிரதாப்சிங் என்பார் கைது செய்யப்பட்டாராம். இன்னும் பலர் கைது செய்யப்படலாம்.

* * *

சென்ற சனியன்று சென்னைச் சிறையினின்றும் முனிசாமி என்ற ஒரு கைதி, சிறையோரம் ஓடும் கூவம் நதியிற் குதித்து அதன் வழியே நீந்திச்சென்றான். ஆனால் அவன் அன்று மாலையே பிடிபட்டான்.

* * *

மங்கோலிய ஜனக் கட்சியார் மாஜி யரசர் ஹூடு குட்டு போக்டாக்கான் சொத்துக்கள் அனைத்தும் பறிமுதல்செய்து கல்விக்காகப் பயன்படுத்த நிச்சயித்திருக்கின்றனர். சொத்துக்களின் மதிப்பு 10-லட்சம் ரூபா.

* * *

காயற்பூர் சமஸ்தானக் காம்பத்து நகரில், மால்கிகந்து வரி விஷயமாகப் பஞ்சாயத்தாரில் பலரை அரசாங்கத்தார் சிறைப்படுத்தித் துன்புறுத்துவதைக் கண்டிக்கும் பொருட்டு 45 நாளாக ஹர்தால் நடைபெறுகிறதாம்.

* * *

[illegible] சில விஷயமாக திவான்பகதூர்சிங், க[illegible] என்ற இரு ஜாகீர்தார்களுக்குள் பெரு[illegible] நடந்து திவான் பகதூர்சிங் சார்பார் நால்வர் கொல்லப்பட்டு இருவர் காயமுற்றனராம்.

* * *

மொரோக்காவில் அப்துல் கரீமின் அந்நிய நாட்டு மந்திரியான ஸெர்காவே என்பவன் துரோகம் செய்துவிட்டதாகத் தெரிந்ததின் பேரில் அவன் பீரங்கிவாயில் வைத்துச் சுட்டுக் கொல்லப்பட்டதாக ஒருசெய்தி கூறுகிறது.

# கலம்பகம்

சென்னை அம்பட்டன் வாராவதி ரோட்டில் சென்ற புதன்கிழமை உயிருடன் பிறந்த குழந்தை வீசி யெறியப்பட்டதால் காயம்பட்டு இறந்துகிடந்தது. எறிந்த 'புண்ணியவதி' இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை.

* * *

ஜர்மன் குடியரசுத் தலைவர் வான் ஹிண்டன்பர்க் தம்முடைய 78-வது பிறந்த தினத்தை, நாட்டின் அமைதி காக்கும்பொருட்டு, பகிரங்கமாகக் கொண்டாட வேண்டாமென்று தடுத்துவிட்டார் என "இங்கிலீஷ்மன்" கூறுகிறது.

* * *

ஈஸ்டுபோரன் என்னு மிடத்தில் நடந்த சர்ச் காங்கிரஸில் சென்னை மாஜி கவர்னர் வில்லிங்டன் பிரபு பேசுகையில், கறுப்பு மனிதர்களை வெள்ளைக்காரர்களுடன் முழுதும் சரி சமானமாக நடத்துவதுதான் உலக சமாதானத்தைக் காக்க வழியென்று கூறினாராம்.

* * *

மகாத்மா பிறந்த தினம் பல பாகங்களிலும் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. காகினடாவில் ஸ்ரீமான் ஆண்ட்ருஸ் முன்னிலையில், விபசாரத்திற்காக இனிச் சிறு பெண்களைச்சுவீகாரமெடுப்பதில்லை யென்று அத்தொழிற் சகோதரிகள் உறுதி கூறினர்களாம்.

* * *

சோமாதேவி தமிழ்க் குருகுல ஆசிரம நிர்வாகத்தை ஏற்று நடத்தும்படி டாக்டர் வரதராஜுலு நாயுடு கேட்கப்பட்டிருக்கிறார் என்றும் இதைப் பற்றி 11-ந்தேதி சென்னையில் கூடும் தமிழ்நாட்டுக் காங்கிரஸ் நிர்வாகக் கூட்டத்தில் யோசிக்கப்படும் என்றும் அறிகிறோம்.

* * *

காரைக்குடி ஹிந்துமதாபிமான சங்கத்தின் எட்டாவதாண்டு நிறைவு விழா நாளிது குரோதன௵ புரட்டாசி௴ 26௳ (11-10-25) ஞாயிற்றுக்கிழமை யன்று மதுரை ஹைகோர்ட் வக்கீல் ஸ்ரீமான் சோமசுந்தர பாரதியாரவர்கள் M. A. B. L. தலைமையில் நடைபெறும்.

* * *

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் பாட்னா தீர்மானத்தை முன்னிட்டு ஆந்திர மாகாணத்தில் கௌதமி ஆசிரமத்தின் தலைவர் டாக்டர் சுப்பிரமண்யமும், தமிழ் நாட்டில் ஸ்ரீமான் என். எஸ். வரதாச்சாரியாரும் தங்கள் காங்கிரஸ் அங்கத்தினர் பதவிகளை ராஜீநாமா செய்துவிட்டனர்.

* * *

வில்லிபுத்தூர் தாலுக்கா தேசிய மகாநாடு இராஜபாளையத்தில் 3,4-ந்தேதிகளில் ஸ்ரீமான் வாச அய்யங்கார் தலைமையில் கூடிக்கலைந்தது. மகாநாட்டுத் தலைவரும் வரவேற்புக் கூட்டத்தலைவர் ஸ்ரீமான் பி. எஸ். குமாரசாமி ராஜாவும் நீண்ட பிரசங்கங்கள் செய்தனர். பல தீர்மானங்கள் செய்யப்பட்டன.

* * *

சிரளா கிராமத்தில், சட்டசபை அங்கத்தவர் தேசமுகியின் மருகன் ராமராவ் 3-ந் தேதி ஒரு கடையில் உட்கார்ந்திருக்கும்போது இரு முசமதியர் கோடரிகொண்டு பின்புறமிருந்து தாக்கித் தடியாலும் புடைத்தனரென்றும் இது சம்பந்தமாக 20 பேர் கைது செய்யப்பட்டிருக்கின்றனரென்றும் தெரியவருகின்றன.

* * *

காந்தியடிகள் இவ்வருடம் தமிழ் நாட்டுக்கு வரமுடியாதெனத் தெரிவித்து விட்டமையால 10-ந் தேதிக்குள் காஞ்சியில் கூடும் தமிழ் மாகாண மகாநாட்டுத் தலைவர்பதவிக்கு ஒருவரைத் தெரிந்தெடுக்கச் சிபாரிசுக் சீட்டுகளை எல்லா ஜில்லா கமிட்டிகளும் அனுப்பவேண்டுமென வரவேற்புக் கூட்டக் காரியதரிசி தெரிவிக்கிறார்.

* * *

ஹெட்ஜாஸுக்கு மறுபடியும் ஒரு தூது கூட்டத்தை அனுப்பிவைக்க முஸ்லிம் தலைவர்கள் தீர்மானித்திருக்கிறார்கள். இதன் பொருட்டுப் பண உதவிகோரி ஒரு வேண்டுகோளும் விடுத்திருக்கின்றனர். இந்தப் பிரதிநிதிக் கூட்டத்தாருக்கு அநுமதிச்சீட்டு அளிக்கும்படி இந்தியா அரசாங்கத்தார் மாகாண அரசாங்கங்களுக்கு உத்திரவிட்டிருக்கின்றனர்.

* * *

இங்கிலாந்தில் விவாகரத்து வழக்குகள் கோர்ட்டில் குவிந்து கிடக்கின்றனவாம். இவ்வருஷத்தில் இதுவரை 1200 விவாக[illegible] டன. இன்னும் [illegible] மனவாம். சில [illegible] முழுவிசாரணையின்றி வழக்குகள் முடிவு செய்யப்படுகின்றனவாம். 96 வழக்குகள் எதிர்ப்பில்லாமல் ஒரேநாளில் தீர்க்கப்பட்டன. இவ்வருடத் துவக்கத்தில் நடைபெற்ற கோர்ட்டில் 700விவாகரத்து வழக்குகள் வந்தன. கோடைகாலத்தின் போது 500 வழக்குகள் வந்தன. 1921-ம் வருட கோடைகாலக் கோர்ட்டில் 2942 விவாகரத்து வழக்குகள் வந்தன. இன்னும் மேல் நாட்டு நாகரிகம் முதிர்ந்தால்—?

சென்ற சனியன்று ஜப்பானிலிருந்து சென்னைத் துறைமுகம்வந்த மாரியன் வேல்ஸ் என்ற கப்பல் சோதிக்கப்பட்டது. சோதனைக்குக் காரணம். ஜப்பானிலிருந்து துப்பாக்கிகளும் இராஜத் துரோகப்புத்தகங்களும் இரகசியமாய் வருவதாக இரகசியப் போலீசார் அறிந்தனராம். சோதனையில் ஒன்றுங் கிடைக்க வில்லையாம்.

* * *

அமிர்தசரசில் ஒரு பெரிய இந்து கோயில் கட்டப்படுகிறது. அங்கிருந்த தூர்க்கை குளம் பலவருடங்களாகத் தண்ணீரில்லாமல் உலர்ந்துபோயிருந்தது. இக்குளத்தைக்கோயில் திருக்குளமாக்கப் பண்டித மாளவியா யாகம் செய்து சப்த நதி நீரையும் அக்குளத்திற்கு முதலில்பாய்ச்சிப் பிறகு நீர் நிரப்பினாராம். இஃது ஒருபெரும் உற்சவமாகக் கொண்டாடப்பட்டதாம்.

* * *

பொதுவாக இறக்குமதியாகும் எல்லா நிலக்கரிக்கோ குறிப்பிட்ட இடங்களிலிருந்து இறக்குமதியாகும் நிலக்கரிக்கோ காப்புவரி விதிக்கவேண்டுமோவென்றும் எவ்வளவு வரி விதிக்கப்பட்ட வேண்டுமென்பதை வரிக் கமிட்டியார் விசாரணை செய்யவேண்டுமென்றும் அரசாங்கத்தார் தீர்மானித்துள்ளார். இதைக்குறித்து அபிப்பிராயங்கூறவோர் காரியதரிசிக்கு எழுதலாம்.

* * *

சென்ற வெள்ளிக்கிழமை சத்தியமங்கலம் ஆரிய வைசியர்கள் சபை கூடி, "ஆரிய வைசிய கிருஷ்ண ரீடிங் ரூம்" என்று ஒரு வாசகசாலை ஸ்தாபிக்கப்பட்டது. மேற்படி வாசகசாலைக்கு, நிர்வாக சபையாரும் நியமிக்கப்பட்டார்கள். இதற்குக் கோயமுத்தூர் ஸ்ரீமான் T. கிருஷ்ண செட்டியார் (பேட்ரன்) ஆதரிப்பவர். இன்னும் சில கனதனவான்கள் ஆதரிப்பதாக வாக்குறுதி செய்திருக்கிறார்கள் என்று ஒரு நிருபர்தெரிவிக்கிறார்.

* * *

பல்லாவரம் சர்க்கிள் வன்னிகுல க்ஷத்ரிய சங்க ஸ்தாபனம் :— பழைய பல்லாவரம் கிராமத்தில் 10-10-25 சனிவாரம் மாலை 5-மணிக்குக் கூடுவதாகவிருந்த ஷை சங்கம் பல்லாவரத்துக்கடுத்த கீழ்க்கட்டளை கிராமத்தில் 11-10-25 ஆதிவாரம் பகல் 2-மணிக்கு ஸ்ரீமான் துசி இராஜகோபால பூபதியவர்கள் அக்ராசனத்தில் கூடுமென்றும், பலகுலாபிமானிகள் விஜயஞ் செய்து மகாத்மாவின் நிர்மாண திட்டத்தைக்குறித்து உபந்நியாசிப்பார்களென்றும் வரவேற்புக்கமிட்டி காரியதரிசி ஸ்ரீமான் கீழ்க்கட்டளை முருகேசநாயகர் தெரிவிக்கிறார்.

* * *

சென்ற 30-ந்தேதி லிவர்பூரில் நடந்த பிரிட்டிஷ் தொழிற்கட்சி மகாநாட்டில், மிஸ்டர் லான்ஸ்பரி, இந்தியாவைப் பற்றிய தீர்மானத்தைப் பிரரேபித்துப் பேசுகையில், "ஈட்டி தாங்கிய துப்பிகளாலும் குண்டுகளாலும் நீங்கள் இந்தியாவை அடக்கியாண்டு வரலாம். மிகவும் இரக்கமற்ற கொடுமைச் செயல்களையும் பன்முறை விடுதலைப் போர் செய்த தேசத்தார் பொறுத்து அனுபவித்தமை சரிதங்கள் வாயிலாக அறியலாம். எப்போதும் இந்தியாவைப் பிரிட்டிஷார் இப்படி அடக்கியாள முடியா"தென்று குறிப்பிட்டார்.

* * *

ஜெர்மனி, இதாலி, இங்கிலாந்து முதலிய தேசங்களுக்குச் சென்ற மேஜர் இரஞ்சிதசிங், ஜெர்மனி, ஆஸ்திரியா போன்ற வளமுள்ள நாட்டைத் தாம் கண்டதில்லையென்றும் விவசாயம் செய்யப்படாத ஒரு சிறு குழி நிலத்தையும் அங்குக் காணமுடியாதென்றும் ஜெர்மானியர் தாம் தோற்றுப்போனதாக நினைக்கவில்லையென்றும் மகா யுத்தத்தின் நினைவு அவர்களுக்கு இருந்துவருகிறதென்றும் மறு யுத்தம் விரைவில் நேருமேல் சீனா, ருஷியா, ஆப்கானிஸ்தானம், ஜெர்மனி இந்நான்கும் ஒன்ருகவிருந்து போர் புரியும் என்றும் "லீடர்" பத்திரிகையில் எழுதியிருக்கிறார்.

* * *

சென்னை அரசாங்கமராமத்திலாகா ஓவர்சியர் ஸ்ரீமான் ராம். நாராயண சர்மா ஒரு வருட ஓய்வுபெற்றிருந்தார். அந்த ரஜாகாலத்தில் வேறொரு கம்பெனியில் [illegible] யம் பெற்[illegible] சம்பளத்தைத் திருப்பி[illegible] வேண்டுமென்று கூறினர். சர்மா இசையவில்லை. சிவில் கோர்ட்டில் சர்மாமீது வழக்குதொடரப்பட்டது. வேலைசெய்து பெற்ற ரஜாக் காலங்களில் இஷ்டமான இடத்தில் வேலைசெய்ய உரிமையுண்டென்றும் ரஜாவில் பெற்ற சம்பளத்தைத் திருப்பிக் கொடுக்க அரசாங்கவிதி கூறவில்லை என்றும் வழக்கு தள்ளப்படவேண்டுமென்றும் சர்மாதரப்பில் வாதிக்கப்பட்டது. மேலதிகாரி உத்தரவின்றி வேறு வேலைசெய்ய விதி இடந்தரவில்லை யென்று கூறி ரஜாவில் பெற்ற சம்பளத்தைத் திருப்பிக் கொடுக்கவேண்டுமென்று நீதிபதி உத்திரவிட்டார்.

[illegible]

30-9-25-ல் அனுப்புபாளையம் [illegible] மன் கோயிலில் ஒரு பொதுக்கூட்டம் கூடிற்று. அவ்வமயம் சைவத்திருவாளர் பண்டித சி. சொக்கநாதம் பிள்ளை அக்கிராசனத்தின் கீழ் நமது பெரியார் ஈ. வெ. இராமசாமி நாயகர் அவர்களுக்கு இவ்வூர் கிராம பஞ்சாயத்தார் சார்பாகவும், மஹா ஜனங்கள் சார்பாகவும் ஓர் உபசாரப்பத்திரம் ஸ்ரீமான் கே. முருகநாதஞ் செட்டியார் அவர்களால் வாசித்துக் கொடுக்கப்பட்டதுடன் ஸ்ரீமான் நாயக்கர் அவர்கள் "கதர், மதுவிலக்கு, தீண்டாமை" என்னும் மூன்றையும்பற்றி நிகழ்த்திய பேருரை எல்லோரையும் ஆக்கத்தில் மூழ்கும்படி செய்தது என ஒரு நிருபர் எழுதுகிறார்.

* * *

தமிழ் நாடு காங்கிரஸ் காரிய நிர்வாகக் கூட்டம் அக்டோபர் 11-ந் தேதி 2 மணிக்குச் சென்னை பிராட்வேயிலுள்ள "தமிழ் நாடு" ஆபீசில் கூடுமென்றும், இக் கூட்டத்திற்கு அங்கத்தவர் அனைவரும் தவறாமல் வர வேண்டுமென்றும் தமிழ்நாட்டுக் காங்கரஸ் தலைவர் ஸ்ரீமான் வரதராஜுலு நாயுடு தெரிவிக்கிறார். அவர் சென்றமாதம் 30-ந் தேதி வரை நூல் சந்தா செலுத்தியவர் ஜாப்தாவை மாகாண காரியாலயத்திற்கு அனுப்பவேண்டுமென்று தாலுக்கா கமிட்டிகளைக் கேட்டுக்கொள்கிறார். மாகாணக் கமிட்டியார் அடுத்த கூட்டத்துக்குப் பின் அனுப்பும் சுற்றுத்தாவின் பிறகே தேர்தல் நடைபெற வேண்டுமெனக் கூறுகிறார்.

* * *

பார்க்கவ குலத்தினரின் 11-வது மகாநாடு அக்டோபர்மாதம் 12, 13-ந்தேதி திங்கள், செவ்வாய் இந்தக் கிழமைகளில் தர்மபுரிக்கடுத்த மாரண்ட ஹள்ளியில் திருக்கோவலூர் ஸ்ரீமான் மா. ரா. குமாரசாமி பிள்ளையவர்கள் தலைமையின்கீழ் சிறப்பாக நடைபெறும். அது சமயம் சென்னை "நவசக்தி" ஆசிரியர் ஸ்ரீமான்களான திரு. வி. கலியாணசுந்தர முதலியார், ஈ. வே. இராமசுவாமி நாய்க்கர், போன் அரங்க முதலியார் பி. எ., கோவை மீனாக்ஷியம்மாள், பேரூர் ஞானப்பூங்கோதையம்மாள் முதலிய அறிஞர்கள் உபந்நியாசம் புரிவார்கள். சென்னை மாகாணத்திலுள்ள பார்க்கவகுல மகா ஜனங்கள் எல்லோரும் விஜயம்செய்ய வேண்டுமென்று உபசாரணைக் கமிட்டி காரியதரிசி எழுதுகிறார்.

* * *

நிலக்கோட்டை தாலூக்கா ஏழுவனம் பட்டி ஸ்ரீமான் அ-செ-ப சுருளியாண்டி செட்டியார் முயற்சியால் ஒரு தேசிய பாடசாலை ஸ்தாபிக்கப்பட்டு சில மாதங்களாக நடைபெற்று வருகிறது. இதில் பஞ்சமப் பிள்ளைகளோடு 30 பேர் கல்வி கற்பிக்கப்படுகிறார். காட்டு முறையிலேயே கல்வி போதிக்கப்படுகிறது. 25 கைராட்டினத்தில் மாணவர்கள் நூற்று வருகின்றனர். சென்ற 20-ந் தேதி வத்தலகுண்டு ஸ்ரீமான் எஸ். கோ. கதிர்வேல் முதலிய சில தேசாபிமானிகள் இப்பாடசாலையைப் பார்வையிட்டார்கள். நன்ருய் நூற்கக்கூடிய 10 மாணவர் நூற்கும் போட்டிப் பரிட்சைக்கு விடப்பட்டனர். கே. மல்லையா என்னுஞ்சிறுவன் அரை மணி நேரத்தில் 300 கெஜம் நூல் நூற்று பரிசுபெற்றான். ஏனையோர் 150 கெஜத்துக்குக் குறையாமல் முன்பின்னாக நூற்று சிறு சிறு பரிசுபெற்றனர் என இராமசாமித்தேவர் தெரிவிக்கிறார்.

* * *

அரிமழத்தில் திருநாவுக்கரசர் கழகத்தின் சார்பாக குரோதன ஆண்டு புரட்டாசித்திங்கள் 13-ம் நாள் சிவன் கோவில் வெளிக் கொட்டகையில் மாலை 4-மணிக்கு சைவத் திருவாளர், அ. ரு. அண்ணாமலை செட்டியார் அவர்கள் தலைமையின்கீழ் ஒரு கூட்டம் கூடிற்று. அவ்வமயம் திண்ணைப் பள்ளிக்கூடத்து மாணவன் சோ. ம. சிவராமன் என்னும் 9 வயதுள்ள சிறுவன், கதர் என்னும் விடயத்தையும் திருவாளர் சா. ச. அ. அ. மாணிக்கஞ் செட்டியாரவர்கள் கழகத்தின் நடைமுறைகளைப் பற்றியும், திருக்கோவலூர் மணம் பூண்டி ஞானியார் மடாலயப் பெரும் புலவர் உயர் திருவாளர் ம. ரா. குமாரசாமி பிள்ளை அவர்கள் "தருமத்துக்கோர் இலக்கணம்" என்னும் விடயத்தைப் பற்றியும் பேசினர் என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

* * *

சித்திரக்கூட மகந்து நாகபாலா ராமரத்னதாஸ் சென்ற வியாழக்கிழமை பம்பாய் மாடுங்காவில்வந்திருந்தார். காசம், க்ஷயம் முதலான [illegible] கொடிப்பொழுதி [illegible] இவர்பா லிரு[illegible] தாசவும் அனைவரும் இலவசமாகப் பெ[illegible] மென்றும் சீடர்கள் பல பாகங்களிலு[illegible] வித்தார்கள். பல மாகாணங்களின[illegible] 20 ஆயிரம் பேருக்குமேல் வந்து [illegible] டனர். மாமிசம், மது இவைக[illegible] [illegible] தில்லை. [illegible] அமிலிலிருந்து மகந்து, திரட்டிப் பால், அல்லது [illegible] கலந்து சிறிது கோம் நிலவை[illegible] காட்டி உட்கொள்ளும்படி கூறி ஒரு [illegible] கொடுத்தார். அனைவரும் வானத்தை [illegible] தங்கள் மருந்துக் கோப்பை[illegible] காட்டிக்கொண்டிருந்தனர். ஒரே காலத்தில் மகந்தவின் கட்டளைப்படி எல்லோரும் மருந்துண்ணர்களாம்.

## குரோதன வருஷமும் தீபாவளியும்

ஒரு வைதிக ஹிந்து பின்வருமாறு எழுதுகிறார்:—

நிகழும் குரோதன வருஷத்தில் தீபாவளி ஐப்பசி௴ 31-ந் தேதி வருகிறதாக அபிப்பிராயப்படுவது சரியானதென்று புலப்படவில்லை. கீழே வரும் காரணங்களால் புரட்டாசிமாதம் 30-ந்தேதி இரவு சதுர்த்தசி ஸ்நானமென்றும், 31-ந் தேதி தீபாவளி என்றும் பல பஞ்சாங்கங்களில் குறிப்பிட்டிருப்பது சரியானதாகத் தோற்றுகிறது. நரக சதுர்த்தசி ஸ்நானம் என்பதினாலேயே இந்த விரதம் திதியை அநுசரித்தது என்றும் திதியைச் சார்ந்த மாதங்களாகிய சாந்திரமான மாதங்களில் ஒரு மாதமே யல்லாமல், சௌரமான மாதம் பிரதானமல்லவென்றும் விளங்குகின்றது. வருஷாதி நடைபெறும் நூற்றுக்குத் தொண்ணூற்றைந்துக்கு மேற்பட்ட விரதாதிகள் சாந்திரமான மாதத்தை அனுசரித்தவையே யல்லாமல் சௌரமான மாதத்தை அநுசரித்தவைகளேயல்ல. சாந்திரமான மாதங்கள் தான் புராதனமானவை; இயற்கைக்குப் பொருத்தமுடையவை. மூனும் பண்ணை கிருஷ்ண ஜோஷியரும் சாந்திரமான ஆஸ்வீயமாதத்தில் அநுஷ்டிக்கவேண்டிய விரத ஜாபிதாவில் 340-ம் பக்கத்தில் சதுர்த்தசியன்று, நரக சதுர்த்தசி என்றும், 341-ம் பக்கத்தில் பெரும்பாலும் சாந்திரமான மாதத்தை அநுசரித்த பண்டிகை ஜாபிதாவில் ஆஸ்வீயமாதம் சதுர்த்தசியன்று தீபாவளி பண்டிகை என்றும் எழுதியிருப்பதால் சாந்திரமான மாதந்தான் அவர் அபிப்பிராயத்தில் உள்ளது என்பது யூகிக்கத்தக்கது. சாந்திரமான ஆஸ்வீயமாதம் பெரும்பாலும் புரட்டாசி, ஐப்பசி மாதங்கள் இரண்டையும் தழுவி வருவதாயிருந்தும் அம்மாதத்திய பகுள சதுர்த்தசி பெரும்பாலும் ஐப்பசியில் வருமாகையால் சாதாரண ஜனங்கள் தீபாவளி ஐப்பசியில் வருவதென்று கருதுவது சகஜம். ஆனால் புரட்டாசிக்கடைசியில் தீபாவளி எப்போதாகிலும் வரும். அப்படி வருவதும் சகஜம்தான். உதாரணமாக-சென்ற பராபவ வருஷம் (1906) புரட்டாசி௴ 30-ந் தேதி ஆஸ்வீய பகுள சதுர்த்தசியன்றும் சர்வசித்து வருஷம் (1887) புரட்டாசி௴ 30-ந் தேதி ஆஸ்வீய பகுள சதுர்த்தசி யன்றும் நரக சதுர்த்தசி ஸ்நானம் நேரிட்டு உலகத்தார் விரதம் அனுஷ்டித்திருக்கிறார்கள். சில சமயங்களில் ஐப்பசி மாதத்தில் இரண்டு பகுள [illegible]துர்த்தசி வந்தகாலங்களில் ஆஸ்வீயமாதம் [illegible]கானமே தவிர ஐப்பசிமாதம் பிரதான[illegible]முவென்று தெரிகிறது. உதாரணமாகச் [illegible] ஆனந்த (1914) மன்மத (1895) [illegible]ருஷங்களில் ஐப்பசி௴ 1-ந்தேதி ஆஸ்வீய [illegible] சதுர்த்தசியும், அதே மாதம் 30-ந் [illegible]தி கார்த்திக பகுள சதுர்த்தசியும் வந்திரு[illegible]ம் ஐப்பசி௴ 1-ந்தேதி ஆஸ்வீய பகுள [illegible]துர்த்தசியில் ஸ்நானம் நடந்தேறியது. சாஸ்தி[illegible]ரோக்தமாக ஒரு சௌரமான மாதத்தில் ஒரு விரதத்தை அனுஷ்டிக்கும் காலம் இரண்டு முறை நேரிடும் பட்சத்தில் பிந்தி வருகின்ற காலம் பிரதானமானது. அப்படியிருந்தும் ஐப்பசி௴ 1-ந்தேதி மேற்கண்ட வருஷங்களில் விரதம் நடந்தேறியதால் சாந்திரமான மாதமாகிய ஆஸ்வீய மாதம் தவிர சௌரமான மாதமாகிய ஐப்பசி பிரதானமல்லவென்று தெரிகிறது. மேலும் அஸ்வினி அல்லது அதற்கு முன் பின் உள்ள நட்சத்திரங்களாகிய பரணி ரேவதியில் பௌர்ணமி நேரிடும் மாதத்திற்கு மாத்திரம் தான் ஆஸ்வீய மென்றும், நிகழும் புரட்டாசி மாதத்தில் நேரிடும் பௌர்ணமி உத்திரட்டாதியில் நேரிடுவதால் அம்மாதம் ஆஸ்வீய மாதமல்லவென்றும் அபிப்பிராயப் படுவதும் சரியானதாகத் தோற்றவில்லை. சூரிய சித்தாந்தத்தில் சொல்லியிருக்கும் சாந்திரமான மாத நாமதேய நட்சத்திர நிர்ணய விதி தோராயமானதேயன்றி துல்லியமானதல்லவென்பது எல்லாச் சித்தாந்திகளுக்கும் தெரிந்த விஷயம். மேலும் ஆஸ்வீய பௌர்ணமி சென்ற சோபகிருது௵ பூரட்டாதி உத்திரட்டாதியிலும், சார்வரி௵ உத்திரட்டாதி ரேவதியிலும், துந்துபி௵ முக்காலுக்கு மேற்பட்ட உத்திரட்டாதி வந்திருப்பதையும் காணலாம். இவ்வருஷம் ஆஸ்வீய பௌர்ணமி முக்காலே மூன்று வீசத்துக்கு மேற்பட்டு உத்திரட்டாதியில் நேரிட்டிருப்பதால். இந்த சாந்திரமான [illegible]மாதத்தை ஆஸ்வீய மாதமா அல்லவா? என்று [illegible] தேகப்படுவதற்குக் காரணமே கிடையாது. [illegible]ண்மையிலே ஆஸ்வீய மாதம் தான். [illegible]திப்பிரகாரம் ஆஸ்வீய பகுள சதுர்த்[illegible] நாலாவது ஜாமத்தில் அதாவது [illegible]க்கு மேல் சந்திர உதய காலத் [illegible]சதுர்த்தசி ஸ்நானம் அநுஷ்டிக்க இது சாஸ்திரவிதி. ஆகையால் [illegible]ஷம் நரக சதுர்த்தசி ஸ்நானம் புரட் [illegible] 30-ந்தேதி இரவும் தீபாவளி புரட் [illegible]-ந்தேதியும் அநுஷ்டிக்கவேண்டிய [illegible] சாஸ்திரோக்தக்கம். அநுஷ்டானம் புரா[illegible]து.

## ஒத்துழையாமை இறந்துவிட்டதா?

இம்மாதம் 3, 4-ந் தேதிகளில் இராஜபாளையத்தில் கூடிய ஸ்ரீ வில்லிபுத்தூர் மகாநாட்டின் வரவேற்புக் கூட்டத் தலைவர் ஸ்ரீமான் பி. எஸ். குமாரசாமி ராஜா அவர்கள் நிகழ்த்திய வரவேற்புச் சொற்பொழிவில் ஒத்துழையாமையைப்பற்றி அவர் குறிப்பிட்ட வாசகங்கள் வருமாறு :—

"ஒத்துழையாமை என்பது கை, கால், செவி, மூக்கு முதலிய கா சானுதி அவயவங்களைப்பெற்றதொரு உருவமுமல்ல; பூதமுமல்ல. அதற்குத் தனியாகக் குறிப்பிடத்தக்க இடமுமில்லை. அதிகார வர்க்கத்தினரின் அடக்குமுறைச் சட்டங்களால் பங்கிக்கத் தகுந்ததுமல்ல. இந்தியாவைப் பிறப்பிடமாகக்கொண்ட ஒவ்வொரு இந்தியரின் உள்ளத்தையும் தனக்கிருப்பிடமாகக் கொண்டதாகும். அவர்கள் அதிகார வர்க்கத்தினராயினும் வேறு எக்கக்ஷியினராயினும், எவ்வகுப்பைச் சார்ந்தவராயினும் அன்னவர்களின் ஹிருதய ஸ்தானங்களில் மர்மமாய்மறைந்து கிடக்குமோர் பொருளாகும். இத்தகைய ஒத்துழையாமை இந்தியர் சுவதந்திரம் பெறுவதற்கு முன் இறந்துவிட்டதெனக் கூறுவது ஊற்றுக்கு நீர்தாத வார்த்தையாகும். அன்றியும் தற்காலம் மிருக பலத்தை ஆதாரமாகக் கொண்டு, உலகில் நடைபெற்றலும் எந்த அரசியல்களும், இனி நீண்டகாலம் குடிமக்களை அடிமைகளாக்கி, அடக்கியாள்வ தென்பது முடியாததென்ற தத்துவத்தையும், அக்கிரமத்தைச் சத்தியத்தினுல் வெல்லலாமென்ற உண்மையையும், தாய்நாட்டின் விடுதலைக்காக தேசத்தொண்டியற்றுவான் வேண்டி, வெளிவந்த தேசாபிமானிகளுக்கு, வெகுமதியாய்க் கிடைக்கப்பெற்ற சிறைச்சாலைகளைத் தவச்சாலையெனச் செய்ததும், இந்தியர் தங்கள் மானத்தைப் பிறநாட்டவரிடம் ஒப்படைக்காமல் தாமே காப்பாற்றிக் கொள்ள வேண்டுமெனப் பறை யறைவித்ததும், இவ்வொத்துழையாமையேயாகும். அத்தகைய ஒத்துழையாமை பெல்காம் காங்கிரஸில் விலக்கி வைக்கப்பட்டிருப்பினும், அவை யின்று வேற்றுருப்போந்து உலவுவதைக்கண்டு அன்னர்கள் ஏமாற்றமடையாமலில்லை."

# நோட்டீஸ்.

## ரூபாய் 200 இனும்.

புதுக்கோட்டை டவுன் ஸ்டேஷன் கிரைம் நெ. 131/25, 381 I. P. C. 2 - 10 - 25௳ மாலை 6 மணி சுமாருக்கு புதுக்கோட்டை டவுன் வடக்கு 2-ம்வீதியில் வாதி ஒரு செட்டியார் வீட்டில் சமையல் வேலைக்கு அமர்ந்த அடியில் கண்ட அங்க அடையாளமுள்ள திருநெல்வேலி ஜில்லா செங்கோட்டை முத்தன் என்ற முத்தய்யா என்பவனுல் திருடப்பட்ட சொத்துக்கள் விபரம்:—

(1) கம்மல் 1-க்கு 7 பெரிய சீமை கமலம் உள்ளதோடு ஜதை ஒன்று மதிப்பு ரூ 2,000. சுமார் 4 காரட் எடை உள்ளது.

(2) சுமார் 1 காரட் எடை உள்ள 7 சன்ன கமலங்கள் உள்ள பூ மோதிரம் 1-க்கு மதிப்பு ரூ 250.

(3) இருபுறமும் சுமார் 5/8 காரட் எடை உள்ள இரண்டு கமலமும், மத்தியில் நயம் குச்சல் சிகப்பும் உள்ளதுமான கோட் மோதிரம் 1-மதிப்பு ரூ 350.

### எதிரியின் அடையாளம்.

உயரம் சுமார் 5 அடி 5 அங்குலம்—மாநிறம்—தடித்த நிரேகம்—கிராப்தலை, ஒட்ட கத்திரித்திருக்கும் - வயிற்றில் தொப்புளுக்குமேல் சுமார் 3 அங்குல நீளம் மேல்நோக்கின காயத் தழும்பு—வலது தொடையில் அரையாப்புத் தழும்பு—மீசையில்லை—மேல் வரிசை முன் பல்கள் கொஞ்சம் நீண்டிருக்கும்—வயிற்றில் சிற்சில இடங்களில் தர் வியாதியினல் கருப்பாயிருக்கும்—ஒரு காலில் சுண்டு விரலும் அதற்கடுத்த விரலும் சேர்ந்தாப்போல் பூமியில் படாமல் தூக்கியிருக்கும்—பார்ப்பதற்கு மலையாளியைப் போலிருக்கும்—ஜாதி திருநெல்வேலி வெள்ளாளர்—வயது சுமார் 25—இடது முழங்காலுக்கு உள்புறம் ஒரு காயத் தழும்பு.

இக் கேஸில் எதிரியை அரஸ்டு செய்து சொத்தை வெளிப்படுத்துகிறவர்களுக்கும் அல்லது அதுவிஷயமாய் சரியான துப்பு சொல்லுகிறவர்களுக்கும் வாதியால் ரூ 200 இனும் அளிக்கப்படும். கண்டுபிடித்தால் புதுக்கோட்டை போலீஸ் ஸ்டேஷனுக்கு உடனே தகவல் கொடுக்கவேணும்.

CHETTIAR,
c/o
A. RAJAVELU MUDALIAR,
போலீஸ் டிப்டி சூப்ரண்டெண்டெண்ட்,
புதுக்கோட்டை.

ஸ்ரீ தயாநந்த சரஸ்வதி இயற்றிய

## சத்தியார்த்தப் பிரகாசம்

(உண்மைப்பொருள் விளக்கம்.)

மொழிபெயர்ப்பாசிரியர் ஏ. ஆர். ஜம்புநாத ஐயர்.

ஒவ்வொரு தமிழரும் இதைப் படித்துப் பயனடைய வேண்டும். வேதத்தின் தத்துவங்கள் இதில் பொதிந்து கிடக்கின்றன. தற்காலத்தில் அரசியல் சமூக விஷயங்கள் முதலிய பல நமது மனதைக் கவர்ந்து நிற்கின்றன. வழி தெரியாது வருந்துகின்றோம். இந்நூலின் கொள்கைகள் வாழ்க்கையில் புகுந்தால் பல சண்டைகள் ஒழியும், வாழ்க்கையில் சத்தியம் நிலவும். இந்துக்கள் இதனைப் படித்தல் அவசியமாகும். சத்தியாக்கிரஹ இயக்கத்தில் டில்லியை ஆட்டுவித்த ஸ்ரீ சிரத்தானந்த சந்நியாசி நூலை ஆதரித்திருக்கிறார். 'சுதேசமித்திரன்' ஆசிரியர் ஸ்ரீமான் ஏ. அரங்கசாமி ஐயங்கார் இப்புத்தகத்திற்கு முகவுரை எழுதியிருக்கிறார்.

விலை ரூபாய் 2—2—0

---

## ஸ்ரீ சுப்பிரமணிய வியாசமும், குருசீடசம்பவ வரலாற்று வியாசமும்

வசனவடிவாகவுள்ள இந்நூல்—சுப்பிரமணியக் கடவுளது பரத்துவத்தை நாமங்களினருத்தத்தோடு வேதாகம புராணவாயிலாக இனிது விளக்கும். அண்ட பிண்ட ரகசியங்களைத் துலக்கிச்சொல்லும். படிப்பவர் மனத்தின்கட் பரமஅன்பூற்றெடுக்க; கேட்பவர் செவியுநெஞ்சுங் குளிர்ந்து அவசமுற; குமாரபகவானுடைய அநேக மெய்யடியார் சரித்திரங்களை யெடுத்தெடுத்தியம்பும். விலையுயர்ந்த காகிதத்தில் அச்சிடப்பட்டுளது.

விலை ரூபாய் 1.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

---

## திருமூலர் திருமந்திரம்

பல பிரதிகளுக்கிணங்கப் பரிசோதித்தும், சில அரும் பாடல்களை (*) இக்குறியிட்டு விளக்கியும், இறுதியில் செய்யுள் முதற்குறிப் பகராதி சேர்த்தும் நல்ல காகிதத்தில் அழகுபெற அச்சிட்டு கலிகோ பயிண்டு செய்யப்பட்டுளது. வி ரூபா 2-4-0

---

இதுவரையில் வெளிவராதது!

முருகவேள்

## பனுவல் திரட்டு

சுப்பிரமணியபக்தர்கள் பாராயணஞ் செய்தற்குரிய சிறந்த நூல்

இதில், திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரனுபூதி, கந்தரந்தாதி, கந்தர் கலிவெண்பா, திருமுருகாற்றுப்படை, முத்துக் குமாரசாமி பிள்ளைத்தமிழ், திருப்போரூர் சந்நிதிமுறை, திருத்தணிகை சந்நிதி முறை, கந்தபுராணம், தணிகைபுராணம், திருச்செந்தூர்ப் புராணம் முதலிய நூல்கள் அடங்கியிருக்கின்றன. கலிகோ பவுண்டு ரூ. 1.

முருகவேள் புத்தகசாலை, இராயப்பேட்டை, சென்னை.

---

## ஏக்கம் ஏன்?

அஜீரணம், மலச்சிக்கல், நரம்புத்தளர்ச்சி, நபும் சகத்துவம், ஞாபகமின்மை ... உடனே நம்முடைய ...

... மாத்திரைகளை

உபயோகிக்கவும். பத்தியம் முதலிய யாதொரு நிபந்தனைகள் கிடையாது. 40 மாத்திரைகளடங்கிய டப்பி விலை ரூ. 1.

இல்லற சுகத்தில் இன்பத்தைக் கோருவோர் இரவில் படுக்குமுன் நம்முடைய,

### ரமணவிலாசினி வடிகா

என்னும் மாத்திரையை யுட்கொண்டால் இச்சை பூர்த்தியாகும்.
16 மாத்திரைகளடங்கிய டப்பி விலை ரூ. 1.

ராஜவைத்திய நாராயணஜீ கேசவஜீ, 57, வைசுபஜார் ரோட் மதறாஸ்.

---

## அமிர்தாஞ்சன்

எல்லா நோவுகளையும் வலிகளையும் குணப்படுத்துகின்றது.

AMRUTANJAN — Best Indian Pain Balm — Amrutanjan — BOMBAY, MADRAS

புட்டி 1-க்கு விலை அ. 10.

எல்லா விடங்களிலும் விற்கப்படும்.

## அமிர்தாஞ்சன் டிபோ,

மதராஸ். அண்டு பம்பாய்.

---

## கிருஷ்ணாமிர்த லேகியம்

பல நற்சாட்சிப் பத்திரங்கள் பெற்றது

சாஸ்த்ரோக்தமாயும் உயர்ந்ததாயுமுள்ள மூலிகைகளால் தயாரிக்கப்பட்டது. மேக சம்பந்தமான உஷ்ணம், கணச்சூடு, மலபந்தம் முதலியன போக்கி தாதுபுஷ்டி, தேகபலம், முகவசீகரம் முதலியன உண்டாக்கும். ஸ்திரீகளுக்கு உபயோகப் படுத்துவதால் கருப்பாசயம் பலப்பட்டு மாதவிடாயாலுண்டாகும், பல பிணிகள் நீங்கப் பெற்று சந்தானபாக்கியம் அடைவார்கள். எவ்வித பத்தியமின்றி உபயோகிக்கலாம். ஸ்திரீகளும், புருஷர்களும், ஏககாலத்தில் சாப்பிடக்கூடிய விசேஷம் வாய்ந்தது.

இரண்டு வேளை 20 நாள் சாப்பிடக்கூடிய டின் 1-க்கு ரூ. 2 0 0

(வி. பி. தபால் சார்ஜ் பிரத்தியேகம்,)

ஜி. செல்வபதி செட்டி & கோ, பெரம்பூர் பாரக்ஸ், மதராஸ்.

---

ரிஜிஸ்டர் செய்தது.

பொன் வெள்ளி மெடல்கள்பெற்ற மெடிகேடட் No. 1. ஏ.ஜே

## பரிமள மூக்குத்தூள்

இந்த பெயர்பெற்ற No. 1 ஏ. ஜே. பரிமள மூக்குத்தூள் நூதனமாய் கண்டுபிடிக்கப்பட்டது. இது வெகுபேர்களால் வாங்கி உபயோகித்து ஆயிரக்கணக்கான நற்சாட்சிப் பத்திரம் பெற்றிருக்கிறது. இந்த மேலான தூளினால் தீரும் வியாதிகளாவன :—ஜல தோஷம், பீனிசம், ஒற்றைத்தலைநோய், மண்டைகுத்தல் எல்லா வியாதிகளையும் சொஸ்தப்படுத்திவைக்கும். இதை உபயோகித்துப் பாருங்கள்.

புட்டி 1-க்கு 0-4-0 டஜன் 1-க்கு 2-4-0 சேர் 1-க்கு (24 தோலா) 1-9-0

### கனதனவான்களுக்குத் தெரிவிப்பது

No. 1 A. j. சாயபு பட்டணம்பொடியை வாங்கி உபயோகியுங்கள். இந்தப்பொடி கம்பெனியானது 30 வருஷ காலமாக மதராஸ் சவுகார்பேட்டையில் நடந்துவருகிறது. கனதனவான்களுக்குத் தெரிந்திருக்கும். ஆகையால் பலவாறு கூறுவதில் பிரயோசனமில்லை. ஒரு தடவை தருவித்து பார்த்தால் உண்மை விளங்கும்.

சாதாபொடி வீசை 1-க்கு 3-4-0. மேற்படி ½ வீசை 60 தோலா 1—11—0
மேற்படி சேர் 1-க்கு 0—11—0

இந்த விலைக்கு அகப்படும். மொத்தமாய் தருவிக்கும் வியாபாரிகளுக்கு தக்க கமிஷன் கொடுக்கப்படும். தபால் மூலம் எழுதி தெரிந்துகொள்ளலாம்.

சி. ஜெயினுலாப்தின் சாயபு,
நெ. 104, 105, தங்கசாலை வீதி, சௌகார்பேட்டை, சென்னை.

---

இனும்! இனும்!!

வெகுநாள் உழைக்கக்கூடியது

பார்ப்பவர்கள்

## 150ரூ. மதிப்பிடக்கூடியது

### 5 வருஷம் உத்தரவாதம் தரப்படும்

8 மூலையுள்ளதும் ஓரத்தில் அருப்புள்ளதும் அசல் பொன்முலாம் போட்ட மூடியுடன் கடியாரத்தின் மேல் சுற்றிலும் வெகு அழகாக அமைக்கப் பெற்றது.

கடியாரத்துடன் கையில் அணியும் உயர்ந்த தோல் பட்டையும் அழகான பெட்டியும் இனாமாக அனுப்பப்படும்.

கடியாரத்தின் விலை ரூ. 7-8-0

தபால் செலவு வேறு.

ஜலால் அண்டு ஸன்ஸ்,
61, ராட்டன்பஜார் ரோட், பார்க்டவுன் மதராஸ்.

---

## சுந்தர்ஸிங் அல்லது பாஸ்கரவிலாஸ் படுகொலை

விலை ரூபா 1—8—0

முருகவேள் புத்தகசாலை, இராயப்பேட்டை, சென்னை.

Printed and Published by T. V. Kalyanasundara Mudaliar (Editor) at the Sadhu Press, 44-Bazaar Road, Royapettah, Madras.

